




யாவரும் பப்ளிஷர்ஸ்

புதிய
வெளியீடு

# ம. இராசேந்திரன் (ம.ரா)
## கதைகள் முழுத்தொகுப்பு

**சிறப்புத் தள்ளுபடி ₹ ~~750~~ ₹600**

அஞ்சல் இலவசம்

9940021472

G Pay 9940021472

**www.bookpick.in**

# கணையாழி

மலர்: 59 இதழ்: 10
ஜனவரி 2024 விலை ரூ. 25/-



**கணையாழி**
தொடர்புக்கு : +91 94432 69689
மின்னஞ்சல்: kanaiyazhi2011@gmail.com

உங்களுடன்



## வைக்கப்படுவார்!

*புத்தாண்டுப் பொங்கலோடு*
*முத்தமிழறிஞர் கலைஞரின்*
*கனவுக்குப் பொன்விழா!*
*அவர் எடுத்த*
*அய்யன் வள்ளுவர் சிலைக்கு*
*வெள்ளி விழா!*
*கொண்டாடுகிற*
*முதல்வரை வாழ்த்துவோம்!*

*திருவள்ளுவர் சிலை*
*இப்போதும் திருவள்ளுவரோடு*
*கலைஞர் நடத்தும் உரையாடல்!*
*அமைதிக் கவிதை!*

*திருவள்ளுவர் சிலை*
*பாறையைக் குடைந்து அல்ல*
*பாறை மேல் நிற்கிறது!*

*முப்பால் தந்த*
*திருவள்ளுவருக்குத்*
*தமிழ் நாட்டின்*
*மூன்று இடங்களில் இருந்தும்*
*வெட்டியெடுக்கப்பட்ட*
*வெட்டுக்கல்லில் சிலை!*

*அம்பாசமுத்திரக் கல்லில்*
*அடித்தளம், அறம்!*
*அதற்கும் மேலே*
*பொருளும் இன்பமுமாக*
*காஞ்சிபுரத்திற்கு அருகில் இருக்கும்*
*சிறுதாமூர், பட்டுமலைக் குப்பம் கற்கள்!*

*திருவள்ளுவர் சிலை*
*தஞ்சாவூர்ப் பெரிய கோயிலைப் போல*
*கடலில் நிற்கும் கோபுரம்!*

*திருக்குறள்!*
*திருவள்ளுவரின் மூச்சுக் காற்று*
*உலக மானுட ஆவணம்!*

*திருவள்ளுவர் சிலை*
*கேட்டுக் கொள்ளும் மனதுடையோர்க்கு*
*ஆர்ப்பரிக்கும் கடலில் நின்று*
*மூன்று விரல் காட்டி*
*தமிழ்ச் சிந்தனையை விளக்கும்*
*மௌனக் கதை சொல்லி!*

*அந்தச் சிலை*
*திருவள்ளுவருக்கு மட்டும் இல்லை*
*சிந்தனைக்கும் மரியாதை!*

திருவள்ளுவர்
தமிழ் ஞானமரபின் அடையாளம்!
நிழலின் நிஜம்!

திருக்குறள்
தமிழ்ச் சிந்தனைகளின் கருவூலம்!
கால அலைகளால் கலைக்க முடியாத
தமிழ் உலகின் விடியல்!

மானுட வாழ்க்கையின்
சாரமும் ஈரமும்!
கனவுகளின் உரைமுகம்!
காலத்தின் உறைவிடம்!
இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும்
முற்பட்ட சிந்தனையோடு
காலம் நடத்திக் கொண்டிருக்கும்
கலந்துரையாடல்!
காலத்தின் அணிகலன்!
உலக நீதிக்கு
வழிகாட்டும் நடைமுறை!
மதம் கடக்கும் ஞானம்!

சிலை என்பது
பாறையின் மறுபெயர் இல்லை.
அது
உளி எழுது கோலால்
உருவாகும் காவியம்!
தலைமையைப் போலவே
உளி விழுப் புண்களால்
உருவாகும் ஓவியம்!

சிலையில் தெரிவது
நிற்கிற கல் மட்டுமில்லை
அது
சிலையாக உருவாகக் கழிக்கப்பட்ட
சில்லுகளின் தியாகமும் தான்!

சிலை
காலத்தைக் கடந்து நிற்கும்
உழைப்பு!
மனிதர்கள்
சாதனை படைக்கத் தூண்டும்
உந்து சக்தி!

"வைக்கப்படும்" என்ற ஒரே சொல்லை
நான்கு திருக்குறளில்
இடம் பெறச் செய்திருக்கிறார்
திருவள்ளுவர்!

அவற்றுள்
"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"
"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்" என்ற
இரண்டு திருக்குறளும்
கூடுதல் கவனத்திற்கு உரியன!
வையத்துள் வாழ்வாங்கு
வாழ்பவன் என்பதில்
வாழ்பவன் என்பது இப்போதும்
வாழ்ந்து கொண்டிருப்பவர் என்று
நிகழ்காலப் பொருளைத் தருகிறது!
சமுதாயம் வாழ
வாழ்ந்து மறைந்தவர்களுக்கு
நடுகல் வைத்துக் கொண்டாடுவது மரபு!
ஆனால் திருவள்ளுவர்
வாழ்ந்து கொண்டிருப்பவர்களும்
தெய்வமாக
வணங்குதற்கு உரியவர்கள் என்று சொல்கிறார்!
அப்படியானால்
மறைந்த பிறகும் சமுதாயம் வாழ
வழிகாட்டிக் கொண்டிருப்பவர்கள்
புகழ் உடம்பில்
எப்போதும் வாழ்கிறார்கள்
திருவள்ளுவரைப் போல!

அதனால்தான் வள்ளுவர்
"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்" என்று
நிகழ் காலத்தில்
சொல்லியிருக்கிறார் போலும்!

மூன்று கடல்களையும் இணைக்கிற
முப்பால் நாயகனோடு
கண்ணாடிப் பாலத்தால்
காலத்தையும் விவேகானந்தரையும்
சேர்த்திருக்கிறார் முதலமைச்சர்!
அப்போது வாழ்த்துச் சொல்ல
வந்து நின்றது மழையும்!

திருக்குறள் சொல்கிறது
அப்படி உரியவர்களுக்கு
முறை செய்து
மக்களைக் காப்பாற்றும் ஆட்சியாளரே
காலத்தின் எல்லை கடந்தும்
மக்கள் மனதில் நிற்கும்படி
தலைவர் என்று
வைக்கப்படுவார்!!

அன்புடன் **ம.ரா.**

# உள்ளடக்கம்

## கட்டுரை



## சிறுகதை



## கவிதை



## கடைசிப் பக்கம்



சிறுகதை

கவிஜி

# மதில் மேல் நானும்

ஏன் பூனை அத்தனை அமைதியாக அமர்ந்திருக்கிறது.... ஏன் வெறுமனே வீதியை வேடிக்கை பார்க்கிறது என்று கேட்டால் என்ன பதில் சொல்வது.

பூனை வாழ்வதால் என்ன பயன் என்று கேட்பது எத்தனை அறிவிலி.

பூனையை அருகிலிருந்து பார்ப்போருக்கு தெரியும். அது எத்தனை அழகென்று. எத்தனை அறிவென்று. எத்தனை நுட்பம் வாய்ந்ததென்று. அதனுள் ஒரு தியானம் இருக்கிறது. அதனுள் ஒரு வெளி இருக்கிறது. உலகை உற்று நோக்கும் உன்னதம் அதனிடம் இருக்கிறது. ஆராயும் அற்புதம் அதன்வழியே நிகழ்கிறது. அது பார்க்கும் இடமெல்லாம் அலையூடும் அனுபூதி.

கையில் நாக்கைத் தடவி முகத்தை துடைக்கும் அளவுக்கு மதிகொண்ட பிராணி. நாக்காலேயே தன் உடலை சுத்தம் செய்துகொள்ளும் சின்ன உடலில் ஒரு சித்திரம் நெளிவதைக் காணலாம். மதில்மேல் அமர்ந்து மணிக்கணக்காய் வெற்றிடம் காணும் ஞானம் வாய்ந்த அதை... ஏன் அப்படி என்று கேட்டால் எப்படி. கண்களை மூடிக்கொண்டால் உலகம் இருண்டுவிடும் என்று பூனை நினைத்துக்கொள்வதில் என்ன தவறு. மனிதன் கண்ணை மூடினால் கூடதான் உலகம் இருண்டு விடுகிறது. மனிதனுக்குத்தான் அது கேவலம் பூனை. அதற்கு அது யானையாகக்கூட இருக்கலாம். எந்த உயிர் எதுவென்று எவன் சொல்ல முடியும்.

யானைக்கே அடி சறுக்கும் போது பூனைக்கு மதில் சறுக்காதா. சறுக்கல் இல்லாத பாதையில் பயணம் எப்படி சுவாரசியமாக இருக்கும். பேருந்தில் ஏறி ஜன்னல் சீட் கிடைத்தும் தூங்கிவிடும் மனிதர்களிடம் எந்த மியாவ் ஒலிக்கும். ஜன்னல் கிடைத்தால் கழுத்தைத் திருப்பித் திருப்பி வேடிக்கை பார்க்கும் பூனைக்கு இந்த பூமி ஒவ்வொரு முறையும் ஆச்சரியம்தான். அதன் வாழ்வுக்கு ஆச்சரியமே டார்ச். தேங்கிப்போன வாசலை அங்கும் இங்கும் நடந்து கோலமிடும் பூனை... தூரிகைப்பொதி என்கிறேன். கையில் கிடைக்கும் பொதிகை என்பேன்.

பூனைக்கெதிரே அமர்ந்துவிட்டேன். வீணைச் சத்தம் வாலில். எனக்கெதிரே பூனையும். காது மடலில் கவிதை.

அது என்னைப் பார்ப்பது போல இருந்தாலும்... அது எண்ணத்தில் என்னவென்று நமக்கெப்படித் தெரியும்.

மனம் உவந்து சோம்பேறிப் பூனை என்று சொல்லும் சொற்களுக்கு செவி சாய்ப்பதில்லை பூனை. தானறிந்த அறிவு கொண்டுதானே ஒருவன் வாழ்த்துவதும் தாழ்த்துவதும். தன் செயல்களே தான் யார் என்று சொல்லிவிடும். வெளியே தேடிக் கிடைப்பதுதான் அறிவு. அது தெரியாத மனிதர்களுக்கு உள்ளே தேடுவதுதான் ஞானம் என்று தெரியவா போகிறது. பூனை போல சிந்திக்கக் கற்றபோது... மனிதன் இப்படிச் சுயம் கொப்பளிக்கக் கத்துவது கேட்கதான் செய்யும்.

இருந்தும்... உடல்மொழியில் ஒரு நெளிவு கொண்டுவிட்டேன். உள்ளத்தின் நோக்கத்தில் உறவுக்கு தூரம். உறுதுணைக்கு நிழல். உடல் மடங்கிக் கிடப்பது கதகதப்பு. ஒளி வாங்கிச் சிரிப்பது குறுகுறுப்பு.

பயன் கிடைத்தால்தான் பகல் நகரும் என்றால்... ஐயோ பாவம் என்றுதானே சூரியன் சிரிக்கும். வானுக்கடியே எல்லாம் அப்படி அப்படியே இருக்க... ஓர் அறுபது வயது வாழ்க்கைக்கு எத்தனை தீசிஸ். தனக்கு கீழேயே இருக்க வேண்டும் பூனை வால்கள் என மதில் யோசிப்பது போல சித்த பிரமை ஒன்றுண்டோ.

இப்போது பூனை பேசுவது எனக்கு புலப்படத் தொடங்கிவிட்டது. அது சிரிக்கிறது. எல்லாமே கேலிதான். மானுடப் பிறழ்வுகளை மிகத்துல்லியமாக உணரும்போது கொஞ்சம் பயமாகவும் இருந்தது. அதனால்தான் அந்தப் பம்மல்களும் என்றும் புரிந்தது.

பயப்படாத மியாவ்... பாத்துக்கலாம் என்ற மியாவுக்குள் மாயாவி இருக்கிறான். மலையளவு துளியளவும் இருக்கும்.

கேட் வழியே வீதி தெரியும் வரை கழுத்தைத் திருப்பி சாவி கொடுத்த ஒரு பொம்மையைப் போல பார்த்துக்கொண்டே.... "எல்லாம் எங்க போறானுங்கனு நினைக்கற... சாகத்தான். ஒவ்வொரு நாளுமே சாவை நோக்கி நகரும் பயணம் தானே..." என்றது. மியாவ் தான். மீனிங் வந்துவிட்டது.

"என்ன பூனை.... இதெல்லாம் உனக்கு எப்பிடி தெரியும்...!" என்றேன்.

"ஏன் உங்களுக்கு மட்டுந்தான் எல்லாம் தெரியுமா. கிறுக்கு பயபுள்ளைகளா. எங்களுக்கும் தெரியும். அது உங்களுக்கு தெரியாது. நீங்கதான் கண்ண திறக்கறதே இல்லயே. ஆனா வாய திறந்தா மூடறது இல்ல. காது குடுத்து எத கேட்ருக்கீங்க. கத்தற குயில கூட சூப்பரா பாடுதுனு சொல்ற படுபாவிங்க தான நீங்க..."

"ஹலோ பூனையா... என்னை அவுங்க கூட சேக்காத. அதான் உன்கூட வந்துட்டேனே..." என்றேன்.

சட்டென அமைதியாகி விட்டது. கண்களை ஆழமாக மூடித் திறந்தது. பச்சைக் கண்களில் பவளம் இரண்டு ஜொலிக்க... அது சூனியப் பார்வை. எதிர்படும் பொருளையெல்லாம் ஊடுருவி ஓடும் காற்றுப்புரவி. பார்த்துக்கொண்டே இருந்தேன். கேள்வி.... இல்லாமல் போய்க்கொண்டிருந்தது. பிறகு பதிலும் தேவை இல்லை என்று தோன்றியது. அப்படியே சும்மா இருக்கறதுல என்ன பிரச்சனை. பூனை நடை நடக்கையில்தான் புரிந்தது. எத்தனை அழகு இந்தப் பாதை. எத்தனை வசீகரம் இந்த மதில்கள். சின்னச் சின்ன சந்துகளிலும் புகுந்து சென்றுவிடும் லாவகம் இந்த உடலுக்கு. வளர்ந்துகெட்ட மனசங்கள விட நீண்டு நெளியும் பூனை நச்சுன்னு இருக்கு. என்னை நானே ஆராதித்துக்கொண்டேன். உடல் சிலிர்ப்புக்கு உள்ளத்தின் வளைவுகள் அமோகம். காஃப்கா மட்டும்தான் வண்டாக வேண்டுமா... கவிஜி பூனை ஆகக்கூடாதா.

இவனுங்களே வளக்கறேன்னு நினைச்சாலும்... கத்தினா தான் சோறு






# கணையாழி வாழ்த்துகிறது!

2024 ஆண்டுக்கான சாகித்ய அகாதமி விருதினைத்
திருநெல்வேலி எழுச்சியும் வ.உ.சியும் 1908
என்ற ஆய்வு நூலுக்காகப் பெறுகிறார்
எழுத்தாளர் ஆ.இரா.வேங்கடாசலபதி.

வைப்பானுங்க - பூனையாவே ஆகிவிட்ட நான்தான் பேசுகிறேன்.

இருவர் பேசிக்கொண்டே வாசல் கடந்தார்கள். எங்கள் கண்கள் ஒருசேர அவர்கள் மேல் விழுந்து ஈஷித்தது.

மனுஷங்க சந்திச்சுக்கறதே பெருமை பேசிக்கறதுக்கு தான் போல. பையன் வெளிநாட்டுல இருக்கான்னு சொல்றதுல என்ன பெருமை. அது நான் யாருமில்லாம சுடுகாட்டுல இருக்கேனு சொல்றதுக்கு சமம்னு தெரிய மாட்டேங்குதே.

பூனைக்கு என்ன புரிந்ததோ... என்னைப் புரிந்ததோ.... பேச்சை மட்டுமல்ல... நினைப்பையும் குறை என்பதாகப் பார்த்தது. பச்சைப் பார்வையில் பாசாங்கு இல்லை. எதிரெதிரே இருந்த நாங்கள் எப்போது அருகருகே ஆனோம்... தெரியவில்லை.

மற்றவங்க கண்ணுக்கு இப்போது ஒரு பூனை மாதிரி தெரிஞ்சாலும்... நாங்க ரெண்டு பேர். என்ன ஒரே மாதிரி இருக்கறதுனால ஒன்னாவே இருக்கறதுனால ஒன்னு மாதிரியே தெரியறோம்.

என் பேர் சொல்ல முயற்சித்தேன். ஆவென வாய் திறந்து ஒரு கொட்டாவி விட்டது. பேரை வெச்சுகிட்டு என்ன பண்ண. பால் கிடைக்குமான்னு பாரு கண்ணா என்றது.

பரவசத்துக்கு வேலையே இல்ல. பகல் தூக்கம் எத்தனை அருமை தெரியுமா. இரவில் நிலா வெளிச்சம்... ஆஹா.... சொல்லச் சொல்லவே மியாவ் என்று மிரட்டி மூடு என்றது. சொல்லி சொல்லியே அதோட வீரியத்தை கெடுக்கக் கூடாது. சும்மா பாரு. போதும். பூனை மனம் புரிகின்றபோது... புத்தாடையும் அழுக்காகும் என்ற சிந்தனை வந்துபோனது. வீதியில்தான் எத்தனை கோமாளிகள். போறவன் ஏன் திரும்ப வந்துகிட்டே இருக்கான். கேள்வி கேட்கக் கூடாது. வெறுமனே பாக்கணும். தலையைத் திருப்பி பார்ப்பதில் இருக்கும் சுகம் ஆஹா. போவது போல போய்... சுவர் மறைவில் நின்று சட்டென திரும்பி பதுங்கிப் பார்ப்பது எத்தனை பெரிய விளையாட்டு. விளையாட்டு இல்லாமல் விடிந்து என்ன பயன்.

சோம்பல் முறிப்பதில் இருக்கும் சொர்க்கம் சொல்லவே முடியாதது. காலால் காதடித்துக் கொள்ளும் நொடியெல்லாம்... பட்ஸால் காது குடையும் ஸ்ஸ்ஸ்ஸ்... பூனை ஆனாலும் மனித நினைப்பு எனக்கு இன்னும் இருக்கிறது. விட்டொழிய வேண்டும்.

பூனை ஓடிப்போச்சு... காணோம் என்று சொல்லும் நாள் வரும். அதைக் கேட்க அந்தப் பூனை இந்தப் பூனை என்று எந்தப் பூனையும் இருக்கப் போவதில்லை.

துறவிகளுக்கு மட்டுமா... பூனைகளுக்கும்தான் நிரந்தர வீடு இல்லை.

chevijay80@gmail.com ■



கட்டுரை

துரை.தனபாலன்

# பத்துப்பாட்டு நூல்களில் இயற்கை

வேறு பல் துகிலின் நுடங்கி, அகில் சுமந்து,
ஆர முழு முதல் உருட்டி, வேரல்
பூவுடை அலங்கு சினை புலம்ப, வேர் கீண்டு,
விண் பொரு நெடு வரைப் பரிதியின் தொடுத்த
தண் கமழ் அலர் இறால் சிதைய, நன் பல
ஆசினி முது சுளை கலாவ, மீமிசை
நாக நறு மலர் உதிர, யூகமொடு
மா முக முசுக்கலை பனிப்ப, பூ நுதல்
இரும் பிடி குளிர்ப்ப வீசி, பெருங் களிற்று
முத்துடை வான் கோடு தழீஇ, தத்துற்று
நன் பொன் மணி நிறம் கிளர, பொன் கொழியா,
வாழை முழு முதல் துமிய, தாழை
இளநீர் விழுக் குலை உதிர, தாக்கி,
கறிக் கொடிக் கருந் துணர் சாய, பொறிப் புற
மட நடை மஞ்ஞை பலவுடன் வெரீஇ,
கோழி வயப் பெடை இரிய, கேழலொடு
இரும் பனை வெளிற்றின் புன் சாய் அன்ன
குரூஉ மயிர் யாக்கைக் குடா வடி உளியம்
பெருங் கல் விடர்அளைச் செறிய, கருங் கோட்டு
ஆமா நல் ஏறு சிலைப்ப, சேண் நின்று
இழுமென இழிதரும் அருவி,
பழம்முதிர் சோலை மலைகிழவோனே.!

*மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரனார் (திருமுருகாற்றுப்படை – வரிகள் -297-317)*

பத்துப்பாட்டு நூல்களில் புரவலரை நாடிப் புறப்பட்ட பொருநரையும், பாணரையும், கூத்தரையும் ஏற்கனவே பரிசில் பெற்று மகிழ்ந்த இரவலர்கள், வள்ளல்களின் வாழ்விடத்திற்கு வழிகூறி, ஆற்றுப்படுத்தும் பாடல்கள் அடங்கிய பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை மற்றும் கூத்தராற்றுப்படை எனப்படும் மலைபடுகடாம் ஆகிய நூல்களும், வீடுபேறு வேண்டுவோரை, முருகன் அருளால் வீடுபேறடைந்தோர் ஆற்றுப்படுத்துதற் போலமைந்த திருமுருகாற்றுப்படை எனும் நூலும், ஆற்றுப்படை வகை நூல்களாகும்.

முருகன் வாழும், பழமுதிர்ச்சோலைகள் நிறைந்த மலையிலிருந்து வீழும் அருவி நீரின் போக்கை வருணிக்கும் இப்பாடலில்தான் என்னவொரு வேகம்!

அகிலைச் சுமந்து, சந்தன மரத்தைச் சாய்த்துத் தள்ளி, சிறுமூங்கிலின் கொம்பு புலம்புமாறு வேரைப் பிளந்து, உயர்ந்த மலையின்மேல் பரிதியெனப் படர்ந்திருந்த தேனடைகளைச் சிதைத்து, ஆசினிப் பலாவின் சுளைகள் தன்னிடத்தே கலக்க,

சுரபுன்னையின் மலர்கள் உதிர, கருங்குரங்குகளும், முசுக்கலைகளும் நடுங்கி நிற்க, பிடி யானைகள் குளிர்ப்ப வீசி, பெரிய களிற்று யானைகளின் முத்துக்களுடைய வெண்கொம்புகளை உள்ளடக்கிக்கொண்டு குதித்து, நல்ல பொன்னும் மணியும் நிறம் விளங்க, பொன் துகள்களைக் கொழித்துக்கொண்டு, வாழையின் அடிமரம் ஒடிய, தெங்கின் இளநீர்க்குலை உதிருமாறு தாக்கி, மிளகுக்கொடியின் கரிய கொத்துக்கள் சாய, ஆண் மயில்களோடு பெடைகள் கெட்டோட, பன்றிகளும், கரடிகளும் மலை முகடுகளிலே ஒடுங்க, கருங்கொம்புகளுடைய ஆமான் ஏறுகள் முழங்க, மலை உச்சியினின்று பேரிரைச்சலுடன் குதித்தோடுகிறதாம் அருவி!

இப்பாடலில், ஆர்ப்பரித்து வரும் அருவியானது, தன் பாதையில் உள்ளனவற்றை அடித்து, உருட்டும் வேகத்தை, அடங்காத ஆற்றலை, தொடர் வருணனையாகப் புலவர் அளித்திருக்கும் பாங்கு, நாமும் அந்த வெள்ளத்தோடு சேர்ந்து பயணிக்கும் உணர்வினை நமக்கு ஊட்டுகிறது என்றால் அது மிகையல்லவே!

குறிஞ்சி பரதவர் பாட, நெய்தல்
நறும்பூங் கண்ணி குறவர் சூட;
கானவர் மருதம் பாட, அகவர்
நீல்நிற முல்லைப் பல்திணை நுவல;
கானக் கோழி கதிர் குத்த
மனைக் கோழி தினைக் கவர;
வரை மந்தி கழி மூழ்க
கழி நாரை வரை இறுப்ப;

*முடத்தாமக் கண்ணியார் (பொருநராற்றுப்படை - வரிகள்- 218–225)*

பண்டைத் தமிழகத்தில் புலவர்களில் பல வகையினர் இருந்தனர்; அவர்களுள் போர்க்களம் மற்றும் ஏர்க்களம் போன்றவற்றை சிறப்பித்துப் பரணி பாடும் புலவர்கள் பொருநர்கள் எனப்பட்டனர். சீறியாழ் எனப்படும் சிறிய யாழை இசைத்தவாறே பாடல்கள் பாடும் பாணர்கள் சிறுபாணர்கள் என்றும், பேரியாழ் எனப்படும் பெரிய யாழை இசைத்தவாறே பாடும் பாணர்கள் பெரும்பாணர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். கூத்துகள் ஆடிப் பாடுவோர் கூத்தர்கள் எனப்பட்டனர். இவர்களில் பொருநர்களை ஆற்றுப்படுத்துமாறு அமைந்த பாடல்கள் அடங்கிய நூலானது பொருநராற்றுப்படை எனப் பெயர் பெற்றது.

இந்தப் பாடலில், நில மயக்கம் தோன்றுமளவிற்கு, மக்கள் ஒருவரோடொருவர் ஒன்றிக்கலந்து ஒற்றுமையாக வாழும் அழகினை நாம் காணலாம். குறிஞ்சி நிலத்துக் குறிஞ்சிப் பண்ணை நெய்தல் நிலத்துப் பரதவர் பாட, நெய்தல் நிலத்துப் பூவால் ஆன கண்ணியைக் குறிஞ்சி நிலத்துக் குறவர் சூட, கானவரான முல்லை நிலத்து மக்கள் மருதப் பண்ணைப் பாட, அக நாட்டவரான மருத நிலத்து உழவர்கள் நீல நிறமுடைய முல்லைக் கொடிகள் மிகுந்த காடுகள் கொண்ட முல்லை நிலத்தைப் போற்றுவர்.

முல்லை நிலத்துக் காட்டுக்கோழிகள் மருத நிலத்திற்குச் சென்று நெற்கதிரைக் குத்தித் தின்ன, மருத நிலத்து மனைக் கோழிகள் குறிஞ்சி நிலத்திற்குச் சென்று தினையை விருப்பத்தோடு உண்ண, குறிஞ்சி நில மலைவாழ் குரங்குகள், நெய்தல் நிலக்கழியிலே மூழ்கி நீராட, நெய்தல் கழிவாழ் நாரைகள் குறிஞ்சி நிலத்து மலையில் தங்கி இளைப்பாறும்.

மாந்தர்களிடையே நிலவும் ஒற்றுமை உணர்வு, அவர்கள் மண்ணில் வாழும் மற்ற உயிர்களுக்கும் பரவி, பொதுமை உணர்வோடு அவை ஒன்றி வாழ்ந்த அழகினைப் புலவர் விவரித்துள்ள தன்மை, புதியதோர் உலகம் செய்வோம் என்ற புரட்சிக்கவியின் கனவினை நமக்கு நினைவுபடுத்துகிறது!

நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி
நிலைஅருள் குட்டம் நோக்கி, நெடிதிருந்து
புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்உகிர் கிழித்த வடுஆழ் பாசடை
முள்அரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவல்
மதிசேர் அரவின் மானத் தோன்றும்

*நல்லூர் நத்தத்தனார் (சிறுபாணாற்றுப்படை - வரிகள்-178 –185)*

*சிறுபாணாற்றுப்படையில் ஆமூரின் வளங்கூறும் இந்த அழகிய பாடலில் குறுந்தாள் காஞ்சிமரக் கிளையில் தங்கி, உறுமீன் வருமளவும் காத்திருந்து, கயல்மீனை வீழ்ந்து எடுத்த சிச்சிலிப் பறவையின் நகம் கிழித்த வடு பதிந்த, பசிய இலையினையும், முட்தண்டுகளையும் கொண்ட வெண்தாமரை மலர்களில் தேனருந்த நெருங்கும் கருவண்டுகள், திங்களைக் கவர வரும் கரும்பாம்பு போலத் தோன்றின என்று கற்பனை வளத்துடன் கவினுறப் பாடியுள்ளார் புலவர்.*

*பறவையின் நகம் பதிந்த பசிய ஓர் இலையைக்கூட உற்று நோக்கிப் பாடிய புலவர் அந்த வெண்மலர்க் கருவண்டுகளை, வெண்மதியைக் கொள் பாம்பிற்கு இணையாக்கிய புலமை, ஈடில்லா நம் இலக்கியத்திற்கு என்றுமே பெருமை!*

வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇ
புனலாடு மகளிர் இட்ட பொலங்குழை
இரைதேர் மணிச்சிரல் இரைசெத்து எறிந்தென
புள்ஆர் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது
கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த
வேள்வித் தூணத்து அசைஇ யவனர்
ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனின் பையயத் தோன்றும்
நீர்ப்பெயற்று எல்லைப் போகி ...

*உருத்திரங்கண்ணனார் (பெரும்பாணாற்றுப்படை - வரிகள்- 311–319)*

*பெரும்பாணாற்றுப்படையில் நீர்ப்பெயற்று என்னும் ஊரின் சிறப்பைக் கூறும் இப்பாடலில், புலவர் உருத்திரங்கண்ணனார் விவரிக்கும் ஒப்பற்ற ஓர் அழகுக் காட்சியினைக் காண்போம்.*

*நீராடு துறையில், தோழியர் கூட்டத்துடன் நீர் விளையாட்டு விளையாட வரும் மகளிர், கரையில் மறந்து வைத்துவிட்டுச் சென்ற பொன்னால் ஆன மகரக் குழையினை மீன் எனக் கருதித் தன் அலகால் எடுத்துக் கொண்ட சிச்சிலிப் பறவை, மற்ற பறவைகள் இருக்கும் பனை மடலுக்குச் செல்லாது, மறையோதும் அந்தணர்கள் வேள்விச் சாலையிலே நட்ட வேள்வித் தூணின் மீது சென்று தங்குகிறது; அப்பறவை வாயில் மகரக் குழையுடன் அத்தூணின் மீது அமர்ந்திருக்கும் காட்சி, யவனர் கூம்பின் மேலிட்ட அன்ன விளக்குப் போலவும், வானத்தே வைகறையில் தோன்றும் வெள்ளிமீன் போலவும் ஒளியோடு விளங்குகிறதாம்!*

*ஆகா..! உயிருள்ள பறவை ஒன்று ஒய்ந்து நிற்கும் அழகினுக்கு சித்திர விளக்கினையும், செவ்வான மீனினையும் ஈடாக்கும் புலமைக்கு இணையேது இங்கு!*

.............. ........................ ............ இன்சீர்க்
கின்னரம் முரலும் அணங்குடைச் சாரல்
மஞ்ஞை ஆலும் மரம்பயில் இறும்பின்
கலைபாய்ந்து உதிர்த்த மலர்வீழ் புறவின்
மந்தி சீக்கும் மாதுஞ்சு முன்றில்
செந்தீப் பேணிய முனிவர், வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறுஇலங்கு அருவிய ............ .............

*உருத்திரங்கண்ணனார் (பெரும்பாணாற்றுப்படை - வரிகள்- 494–500)*

*மலையின் பெருமை கூறும் இப்பாடலில் தெய்வங்கள் வாழ் சாரலில் கின்னரப்புட்கள் இனிமையாகப் பாட, அங்கு மயில்கள்*

*ஆடும் காடுகளையும், முசுக்கலை பாய்வதால் உதிரும் மலர்களுடைய காட்டில், குப்பையை வாரும் மந்திகளையும், களிறுகள் முரித்துக் கொண்டுவரும் விறகாலே தவப்பள்ளி முற்றத்தே செந்தீ ஓம்பும் முனிவர்கள் வேள்வி செய்ய, அங்கு அமைதியாகத் துயிலும் விலங்குகளையும், சித்திரம் தீட்டுதற்போல் சிறப்புறப் புலவர் பாடியிருக்கும் பாங்கு நம் உள்ளத்திலும் அல்லவா அமைதி ஒளி ஏற்றுகிறது!*

நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர் செல, நிமிர்ந்த மாஅல் போல,
பாடிமிழ் பனிக்கடல் பருகி, வலன் ஏர்பு
கோடு கொண்டு எழுந்த கொடுஞ்செலவு எழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை,

*நப்பூதனார் (முல்லைப் பாட்டு - வரிகள்– 1–6)*

*அக நூலான முல்லைப் பாட்டில், அதன் மரபுக்கேற்பப் பாட்டுடைத் தலைவனின் பெயரைக் குறிப்பிடாது பாடியுள்ள நப்பூதனார், தலைவனைப் பிரிந்து முல்லைத்திணைக் காட்டில் வாழும் தலைவியுறும் துயரையும், போர்மேற் சென்று பாசறையில் வாடும் தலைவனது உணர்வுகளையும் மாறி மாறிக் காட்டி, இறுதியில் மழைக்காலத்தில் தலைவன் திரும்பி வருதலை உச்சக்கட்டக் காட்சியாக்கி, நூலின் அமைப்பிற்கு நுட்பமாக அழகு சேர்த்துள்ளார்.*

*கத்துதிரைக் கடல்நீரைக் குடித்தெழுந்த மேகம், இடமகன்ற உலகத்தை வளைத்து, வலமாக உயர்ந்து, மலைகளில் தங்கி, மாலையில் பெருமழையைப் பொழிந்தது. மேகம் அவ்வாறு எழுந்த காட்சி, திருமால் வாமனனாகச் சென்று இரந்தபோது, மாவலி மன்னன் வார்த்த நீரைக் கையில் கொண்டதும், விண்ணையும், மண்ணையும் அளாவி உயர்ந்தது போல் விளங்கியதாம்!*

*அடடே..! கடல்நீர் கொண்டதும் வானெழுந்த மேகத்திற்கு, நீர் கைக்கொண்டதும் விண்ணளந்த மேகவண்ணனை உவமை காட்டியுள்ள புலவரின் திறமையால் தமிழின் பெருமையும் அல்லவா விண்ணளந்து நிற்கிறது!*

கல்காயும் கடு வேனிலொடு
இருவானம் பெயல் ஒளிப்பினும்
வரும் வைகல் மீன் பிறழினும்
வெள்ளம் மாறாது விளையுள் பெருக
நெல்லின் ஓதை அரிநர் கம்பலை
புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசையே என்றும்
சலம் பகன்று கறவுக் கலித்த
புலவு நீர் வியன் பௌவத்து
நிலவுக்கானல் முழவுத் தாழைக்
குளிர்ப் பொதும்பர் நளித் தூவல்
நிரை திமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை
இருங்கழிச் செறுவின் வெள்உப்புப் பகர்நரொடு
ஒலி ஓவாக் கலியாணர்
முது வெள்ளிலை

*மாங்குடி மருதனார் (மதுரைக் காஞ்சி – வரிகள்- 106–119)*

*புறத்திணை ஏழினுள் நிலையாமை பற்றிக் கூறுவது காஞ்சித்திணையாகும். வாழ்வின் நிலையாமையை உணர்ந்து அறம் செய்ய வேண்டும் என்று பாண்டிய நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்தும் வண்ணம் மாங்குடி மருதனாரால் பாடப்பட்டதே மதுரைக் காஞ்சி ஆகும். சங்ககாலத்தில், புவியாளும் அரசர்களையும் புலவர்கள் அறநெறிப் படுத்தும் ஆற்றல் பெற்றிருந்தனர்.*

*கடிய முதுவேனிலால் பெரிய மேகங்கள் மழையைத் தம்மிடத்து மறைத்துக் கொண்டாலும், வெள்ளி என்னும் கோள்மீன் தன்னுடைய இயங்கும் திசை மாறித் தென்திசையில் தோன்றினாலும், ஆறுகளில் வெள்ளம் மாறாமல் பெருகி வர, அதனால் விளைச்சலும் பன்மடங்குப் பெருகும்.*

வயல்களில் நன்கு விளைந்த நெற்பயிர் காற்றில் அசைதலால் எழும் ஓதையும், நெற்கதிர்களை அறுப்பவர்களின் கம்பலையும், பறவைகள் கத்துவதால் எழும் ஆர்ப்பொலியும், சுறாக்கள் திரிகின்ற கடலின் நீர்த்துவலைகள், வெண்மணற் கரையில், தாழையை வேலியாகப் பெற்ற வயலார் சோலை மீது செறிந்து வீசும் ஓசையும், மீன் பிடிக்கச் சென்ற பரதவர்கள் மீன்களை நிரைத்த படகுகளுடன் கரையை அடையும் ஆரவாரமும், பெரிய உப்பங்கழிப் பகுதிகளில், உப்பினை விலை கூறி விற்கும் அளவர் ஒலியும் நீங்காத, வளமான ஊராக முதுவெள்ளிலை விளங்குகிறது.

ஆகா..! வானிலை மாறினும் தானிலை மாறா ஆறுகள் ஓடும் ஊரில் எழும் ஓதைகள், கம்பலை, ஓசைகள், ஆரவாரம் ஆகியவற்றின் மூலம், அந்த ஊரின் இயற்கை வளத்தை விவரிக்கும் போதே, ஒவ்வொரு வகை ஒலிக்கும் ஒவ்வொரு பெயர் சூட்டிய, நம் தமிழின் வளத்தையும் அல்லவா விளங்க வைக்கிறார் புலவர்!

புன்கொடி முசுண்டைப் பொதிப்புற வான் பூ
பொன்போல் பீரமொடு புதல்புதல் மலர
பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
இருங்களி பரந்த ஈரவெண்மணல்
செவ்வரி நாரையொடு எவ்வாயும் கவர
கயல் அறல் எதிர, கடும் புனல் சாஅய்
பெயல் உலந்து எழுந்த பொங்கல் வெண்மழை
அகல் இரு விசும்பில் துவலை கற்ப

*மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரனார்*
*(நெடுநல்வாடை – வரிகள்-13-20)*

மாந்தர் உள்ளத்தில் மலரும் காதலும் மாறா நிலையுடைய கடமையும் சேர, தலைவனைப் பிரிந்து, உறக்கமின்றி விழித்திருக்கும் தலைவிக்கு, கொடியதாகத் தோன்றும் நெடிய வாடைக்காற்றே, பாசறையில் கொதிக்கும் நெஞ்சுடன் வெஞ்சினம் கொண்டு விழித்திருக்கும் தலைவனுக்கு, குளிர்விக்கும் நல்வாடையாகத் தோன்றுகிறது. எனவேதான், நெடுநல்வாடை என்ற நயமிகு நற்பெயர் சூட்டப் பெற்றது அக உணர்வினைக் கூறும் இந்தப் புறநூல். தலைவன் போரில் வென்று, விரைவில் தலைவியிடம் திரும்ப, கொற்றவையிடம் செவிலித்தாய் வேண்டுவதாக இதன் கரு அமைந்துள்ளது.

மெல்லிய முசுண்டைக் கொடிகளின் வெண்ணிறப் பூக்களும், பொன் நிறமுடைய பீர்க்கம் பூக்களும் பூத்துக் குலுங்க, பசுங் கால்களையும், மென்சிறகுகளையும் உடைய கொக்கின் கூட்டங்களும், செங்கால் நாரைகளும், சேறு படிந்த வண்டல் மணலில், மழையால் வருத்தமுற்று நின்று, மழை சிறிது விட்ட அளவில், இரைதேட எழுந்தன. வெள்ளநீர் வேகமாக ஓடும்போது அதனுடன் அடித்துச் செல்லப்பட்டு, அந்நீர் அற்று ஒழுகும்போது அதில் துள்ளும் கயல் மீன்களைக் கொக்குகளும், நாரைகளும் உணவாகக் கவர்ந்து தின்றன. மழையாகப் பொழிந்ததால் நீர் குறைந்த வெண்மேகங்கள், கூதிர்க் காலத்தில் சிறு சிறு துவலைகளாகத் தூவக் கற்றுக் கொள்வதற்காகக் கிளர்ந்து விண்ணில் எழுந்தன.

அடடா..! மழைக்காலத்தே புட்கள் மீன் வேட்டையாடும் அழகை மனதிற்கினிய காட்சியாகத் தீட்டிய புலவர், மேகங்களின் அசைவிற்கும் மேன்மையாகப் பொருள் கூறி, தற்குறிப்பேற்ற அணியின் சிறப்பை நற்குறிப்புடனே விளக்கியுள்ள புலமை நாமெல்லாம் மகிழ்ந்து நாள்தோறும் போற்றுதற்குரியது!

மான்கணம் மரமுதல் தெவிட்ட ஆன்கணம்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
ஏங்கு வயிர் இசைய கொடுவாய் அன்றில்
ஓங்கு இரும் பெண்ணை அகமடல் அகவ

பாம்பு மணி உமிழ பல்வயின் கோவலர்
ஆம்பல் அம் தீம்குழல் தெள்விளி பயிற்ற
ஆம்பல் ஆய்இதழ் கூம்புவிட, வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
அந்தி அந்தணர் அயர, கானவர்
விண்தோய் பணவைமிசை ஞெகிழி பொத்த
வானம் மாமலை வாய் சூழ்பு கறுப்ப, கானம்
கல்லென்று இரட்ட, புள்ளினம் ஒலிப்ப
சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்பத்
துனைஇய மாலை துன்னுதல் காணூஉ

*கபிலர் (குறிஞ்சிப் பாட்டு – வரிகள்-217-230)*

*ஆரிய அரசன் பிரகதத்தனுக்கு, தமிழ் கற்பிக்கவும், கற்புடைய பெண்ணின் வாழ்வுக்கு இடுக்கண் வருதல் ஆகாது எனும் அறத்தை விளக்கவும் கபிலர் பாடியதே குறிஞ்சிப் பாட்டு ஆகும். இதனைப் படித்த பிரகதத்தன் தமிழ்மொழி செம்மொழி மட்டுமன்று, அறமொழியும் ஆகும் என்பதை நன்கு உணர்ந்திருப்பான்!*

*கலித்தொகையில் புலவர் நல்லந்துவனார் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவிக்கு மாலைப் பொழுது கூற்றென வந்ததாகப் பாடியுள்ளார்; ஆனால் இங்கே கபிலர் மாலைப் பொழுது வருகையை மங்கலமாகவே, இயற்கை வருணனைகளுடன் இனிதாகப் பாடியுள்ளார்.*

*மான் கூட்டங்கள் மரங்களின் கீழ் திரண்டு கூட, பசுவின் திரள், தம் கன்றுகளை அழைக்கும் குரலுடன் ஊர் மன்றுகளில் புக, அன்றில் பறவைகள், உயர்ந்த பனையின் உள் மடலில் இருந்து, தம் பேடுகளை அழைக்க, பாம்புகள் இரைதேடிச் செல்வதற்காகத் தம்மிடம் உள்ள மாணிக்க மணிகளை உமிழுமாம்; இடையர்கள் ஆம்பல் பண்ணினைத் தம் அழகிய குழலில் அமைத்து இனிய இசையை எழுப்ப, ஆம்பல் மலரின் அழகிய இதழ்கள் தளையவிழ்ந்து மலருமாம்; மாளிகைகளில் வளைகள் அணிந்த மகளிர், சுடர் விளக்கேற்ற, அந்தணர்கள் அந்திக்காலக் கடன்களை ஆற்ற, கானவர்கள் உயர்ந்த பரண்களின் மேல் தீக்கடைக் கோலால் தீ மூட்டுவராம்; மாமலையைச் சூழ்ந்த மேகம் முழங்க, காட்டு விலங்குகள் கல்லென்ற ஓசை எழ மாறி மாறி ஒலிக்க, பறவைகள் ஆர்ப்பரித்துக் கூடு நோக்கிச் செல்ல, சினமிகு வேந்தன் நடத்திச் செல்லும் முன்னணிப் படையின் வேகத்தைப் போல, மாலைப்பொழுது விரைந்து வந்ததாம்!*

*ஆகா! மாலை வரும் வேகத்தை அரியதோர் உவமையால் அழகுற விளக்கிய புலவர், அவண் தோன்றும் மயக்குறு இயற்கைக் காட்சிகளையும், மக்களின், மாக்களின் மனக் கிளர்ச்சியையும், வெல்லத்தமிழ்த் தேன் கலந்து, விரிவாகப் பாடி நம் உள்ளத்தைக் களிப்பில் ஆழ்த்தும் மாட்சியை என்னென்று சொல்வது!*

.................. ............. கலியாணர்ப்
பொழில் புறவின் பூந்தண்டலை
மழை நீங்கிய மா விசும்பில்
மதிசேர்ந்த மகவெண்மீன்
உருகெழு திறல் உயர் கோட்டத்து,
முருகு அமர் பூ முரண் கிடக்கை
வரிஅணி சுடர் வான் பொய்கை
இரு காமத்து இணை ஏரி,

*உருத்திரங்கண்ணனார் (பட்டினப்பாலை - நகரச் சிறப்பு – வரிகள்-32–39)*

*நாட்டு வளம், நல் அரசு, மக்கள் வாழ்க்கை, மங்காத செல்வம், இவற்றை விளக்கும் வண்ணம், கரிகாற்சோழனின் காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்து உருத்திரங் கண்ணனார் பாடிய பாலைத் திணைப் பாடலே பட்டினப்பாலை ஆகும். இந்நூல், 16 நூறாயிரம் பொற்காசுகள் சோழன் பரிசளித்த பெருமை உடைத்து!*

*மனச்செருக்கு தரும் புதுவருவாய்*



உடைய தோப்புகளின் புறத்தே அழகிய சோலைகள் உள்ளன. அங்கே, மழை நீங்கிய அகல் வானில் தெரியும் திங்களைச் சேர்ந்து விளங்கும் மகம் என்னும் வெண்ணிற நாள்மீனின் வடிவத்தைப் போன்று அமைக்கப்பட்ட வலிய, உயர்ந்த கரைகளைப் பெற்ற பொய்கையானது, மணம் வீசும் பன்னிறப் பூக்களின் சேர்க்கையால் மாறுபட்ட வண்ணங்களுடன் காட்சியளிக்கும். இம்மையிலும், மறுமையிலும் தோன்றும் இன்பங்களைக் கொடுப்பதற்குரிய இணைந்த இரண்டு ஏரிகள், புகார் நகரின் புறத்தே காணப்படும்.

நலமிகுந்த பூம்புகாரின் நிலவளத்தையும், நீர்வளத்தையும் அழகுற விளக்கிய புலவர், ஆங்குள்ள இயற்கை எழில் கொஞ்சும் தோப்புகள் செழுமையை மட்டுமின்றி, செருக்கையும் நல்க வல்லன என்று நுட்பமாகக் குறிக்கும் பாங்கு அவர்தம் நுண்ணறிவிற்கு நல்லதொரு சான்றாகும்!

அலகை அன்ன வெள்வேர்ப் பீலிக்
கலவ மஞ்ஞை கட்சியில் தளரினும்;
கடும்பறைக் கோடியர் மகாஅர் அன்ன
நெடுங்கழைக் கொம்பர் கடுவன் உகளினும்
நேர்கொள் நெடுவரை நேமியின் தொடுத்த
சூர் புகல் அடுக்கத்துப் பிரசம் காணினும்,
ஞெரேரென நோக்கல் ஓம்புமின் உரித்தன்று
நிரைசெலல் மெல்லடி நெறி மாறுபடுகுவிர்.

*பெருங்கௌசிகனார் (மலைபடுகடாம் - வரிகள்-234-241)*

ஆற்றுப்படை நூலான மலைபடுகடாம் குறுநில மன்னன் நன்னன் சேஎய் நன்னனின் கொடைத்திறத்தைச் சிறப்பித்துப் பெருங்கௌசிகனார் பாடியதாகும்.

இந்த இனிய பாடலில், மலைவழியே நடந்து செல்கையில், அங்கு ஆண் மயில், தனது இணையின் பிரிவால் மனந்தளர்ந்து வாடுவதையும், நெடிய மூங்கில் கவடுகளில், கூத்தர் பிள்ளைகளைப் போன்ற கடுவன் பாய்வதையும், செங்குத்தான, இறை உறை மலைகளில், தேருருளை போலத் தொடுக்கப்பட்ட தேனடைகள் தொங்குவதையும் காணுகையில், அவற்றை ஆழ்ந்து பார்த்தல் நுமக்குரிய செயலன்று.

அவ்வாறு பார்த்தவாறு நடப்பின், சேர்ந்து நடந்து செல்லுதல் தவறி, வழி

மாறி விடுவீர்கள் என்று கூத்தர்களை ஆற்றுப்படுத்துகிறார் புலவர்.

காட்டுவழிக் காட்சிகளைக் கற்கண்டுச் சொற்கொண்டு, ஆற்றொழுக்கு நற்றமிழில் அவர் பாட மெய்மறந்து, ஞெரேரெனப் பார்ப்பது கூத்தர்கள் மட்டுமல்ல, கூட நிற்கும் நாமும்தான்!

நிறைவுரை - நம் முன்னோர்கள் நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்திணைகளாகப் பிரித்து, அவற்றின் தன்மைகளையும், அங்கு வளரக்கூடிய தாவர வகைகளையும், வாழக்கூடிய விலங்கு, பறவை போன்றவைகளையும், இயற்கை வளங்களையும், அங்கு வாழும் மாந்தர்களின் உயர்ந்த பண்புகளையும், அழகுற விளக்கி, தங்கள் நிலமேலாண்மை நுண்ணறிவால் நீடுபுகழ்ப் பெருவாழ்வு வாழ்ந்திருக்கிறார்கள்.

அதனைப் புலவர் பெருமக்கள் ஆவணங்கள் போலத் தங்கள் பாடல்களில் பதிவு செய்து, இயற்கை எழிலை ஏற்றமுடன் வருணித்து, பைந்தமிழின் பொற்புடைச் சுவையைத் தங்கள் கற்பனைத் திறனால் மெருகூட்டி, இல்பொருள் உவமையணி, தற்குறிப்பேற்ற அணி போன்ற பல்வேறு அணிகளால் அலங்கரித்துள்ளனர்.

பிறமொழி இலக்கியங்கள் பலவற்றில் பகுத்தறிவுக்குப் பொருந்தாத புராணக் கதைகளும், அவை சார்ந்த கற்பனைகளுமே விஞ்சியிருக்க, நம் இலக்கியங்களில் அரிய இயற்கை உண்மைகளும், அழகிய பண்பாடும், அறக்கோட்பாடுகளின் உச்சமும், அறம் சார்ந்த வீரமும், கற்புநிலை வழுவாக் காதலும், ஈடில்லா ஈகைப்பண்பும், பல்லுயிர் ஓம்பும் சுற்றுச்சூழல் அறிவும், விண்ணைப் போல் விரிந்த, உயர்ந்த சிந்தனைகளும் செறிந்து, விரவிக் கிடக்கின்றன.

குறிப்பாக இயற்கை வருணனைகளில், புலவர்கள் இயற்கையை எவ்வளவு நுட்பமாக, ஆழ்ந்து கவனித்துள்ளனர் என்பதும், பருவ மாற்றம், வானிலை ஆய்வு மற்றும் ஏராளமான அறிவியல் உண்மைகள் குறித்த அவர்களின் நுண்மான் நுழைபுலமும், அகன்ற அறிவும், தொலைநோக்குடைய ஞானமும், உள்ளங்கை நெல்லிக் கனியெனத் தெளிவாகக் காணக் கிடைக்கின்றன.

பாடுபொருளான பாட்டுடைத் தலைவனின் உயர் பண்புகளை விளக்க, தம் பாடல்களில், அத்தலைவனின் ஊரின் சிறப்பையும், இயற்கை எழிலையும், ஒப்பற்ற உவமை நயத்துடன் கற்பனையும் சேர்த்து, உயர்தனிச் செம்மொழியின் ஒளிர்கின்ற சொல் நயமும், ஓங்குகின்ற பொருள் நயமும் மிளிர, சங்க காலப் புலவர்கள் பாடல் புனைந்திருக்கும் பாங்கு, தமிழ் இலக்கியத்தைத் தன்னிகரற்ற இலக்கியமாகத் தரணியிலே உயர்த்தியுள்ளது. அதனால்தான்,

இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்

என்று 'தமிழ் விடு தூது' நூலின் ஆசிரியர் பாடியுள்ளார். தமிழ் இலக்கிய நூல்கள் அனைத்தையும் படித்து இன்புற ஒருவரின் வாழ்நாட் காலம் முழுமையும் கூடப் போதுமானதன்று. அவ்வளவு அருநூல்கள் நம் தமிழ் இலக்கியத்தில் அகமென்றும் புறமென்றும் நிறைந்திருக்கின்றன. நாமும் அவற்றை நன்கு கற்று, அதற்குத் தக நின்று, நானிலத்து மாந்தரெல்லாம் அவற்றைக் கற்றிட வகை செய்வோம்; நற்றமிழின் பெருமைகளால் நாற்றிசையும் வெல்வோம்! செவ்விலக்கியங்களில் இயற்கை எனும் செங்கரும்பை உண்ணுதற்குச் சிறுகூலி கேட்பாரும் உண்டோ!

anbulaham@gmail.com ■

## கணையாழி மின்னிதழ் சந்தா விவரம்

தனி இதழ் ரூ 25

ஓராண்டு சந்தா ரூ 275

சந்தா செலுத்துபவர்களுக்கு மின்னிதழ் அனுப்பப்படும்.

இணையத்தில் வாசிக்க
**www.kanaiyazhi.com**
**magzter.com, Magraan - Magazines**
அன்புகூர்ந்து பாருங்கள்..

## மின்னிதழ் சந்தா செலுத்த வங்கி விவரம்

Account Name - KANAIYAZHI,
Account No. 147202000000792
Bank - INDIAN OVERSEAS BANK,
VALMIKI NAGAR BRANCH,
CHENNAI-600 041.
IFSC CODE- IOBA0001472

G Pay

Kanaiyazhi Tamil Magazine



சிறுகதை
பிரியா கிருஷ்ணன்

# நன்மை பயக்குமெனின்

மதியம் இரண்டு மணிக்கே அந்த மலைப் பிரதேசம் இருட்டத் துவங்கியிருந்தது. மலை மீது பேருந்து ஏறத் துவங்கியபோது பேருந்தின் மீது விழுந்தது போன்ற அதிர்வுடன் பெரும் ஓசையுடன் இடியொன்று கடந்துபோக – வானிலிருந்து தண்ணீரை கொட்டுவது போல மழையும் சேர்ந்துகொண்டது.

பேருந்து மெதுவாகச் சென்றாலும், ஜன்னல்வழியே மழைச்சாரலுடன் சேர்ந்து வந்த குளிரான எதிர்க்காற்று ஜன்னலோர இருக்கையில் அமர்ந்திருந்த வசந்தாவை நடுங்கச்செய்ய, போர்த்தியிருந்த சால்வையை இன்னும் இறுக்கிக்கொண்டாள். சரியாக மூடாத ஜன்னலின் கண்ணாடிக் கதவை மூடுவதற்காக முயற்சி செய்தபோதுதான் ஆகாயத்தை கவனித்தாள். தெற்கு பக்கமாய் வெகு தூரத்தில் கரும்புகை கூட்டம் ஒன்று அப்போதுதான் மேலெழும்பி காற்றில் மெதுவாய் பரவிக்கொண்டிருந்தது. அது மேகம் இல்லை என்பதை உறுதியாய் நம்பியவளுக்கு உள்ளுக்குள் சிறிது பதட்டமும் பரவியது. காரணம், அப்புகை எழும்பியிருந்த திசையில்தான் அவள் வசிக்கும் கிராமம் இருக்கிறது. அங்கே அவளது கிராமம் மட்டும்தான் இருக்கிறது.

பெரியளவில் ஏதாவது எரிந்திருந்தால் மட்டும்தான் இவ்வளவு பெரிய புகைமண்டலம் தோன்றியிருக்கும் என எண்ணியவளுக்கு அது என்னவாக இருக்கும் எனும் குழப்பம். இவள் வெளியே பார்த்துக்கொண்டிருக்கும் போதே இவர்களது பேருந்தை கடந்து ஒரு போலீஸ் ஜீப் வேகமாய் முன்னால் சென்றது.

பேருந்துக்குள் திரும்பிப் பார்த்தாள். இவளைப்போல் வேறு யாரும் அந்தப் புகையை கவனித்தாற் போன்று தெரியவில்லை. நகரத்தின் சந்தையில் இருந்து தாங்கள் வாங்கிய பொருட்களை கிடைத்த இடத்தில் திணித்துக்கொண்டும், நடத்துனரிடம் விவாதித்துக்கொண்டும், தங்களுக்குள் பேசிக்கொண்டும் இருந்தனர். மழைக்கும் குளிர் காற்றுக்கும் அஞ்சி பெரும்பாலான ஜன்னல்கள் எப்போதோ அடைக்கப்பட்டிருந்தன. நடத்துநர் தனது வழியில் இருந்த பொருட்களையெல்லாம் தாண்டியும், மிதித்தும் தன்னிடம் டிக்கட்டுக்காக வந்தபோது வசந்தா கேட்டாள், “நம்ம ஊர்ல எதாவது

தீவிபத்து நடந்துச்சா தாமஸ்? அந்தப்பக்கமா புகையா போகுது?"

அப்போதுதான் அவளைக் கவனித்தவராய் 'வாங்க' என்பது போல் ஒரு பணிவான புன்னகை காட்டிவிட்டு, "டீச்சரம்மாவுக்கு விசயம் தெரியாதுங்களா? விடியக்காத்தாலேயே கிளம்பி வந்துட்டீங்க போல" என்றவர், அவளுக்கு டிக்கட் கொடுத்தவாறு "காலைலேர்ந்து அங்கே பெரிய பிரச்சனை ஓடிகிட்டிருக்கு டீச்சர்... இவ்ளோ காலமா எல்லாரும் எப்படி ஒத்துமையா இருந்தாங்க, யார் கண்ணு பட்டுச்சோ... செரியன் க்ரூப்புக்கும் சாத்தையன் க்ரூப்புக்கும் தகராறு... மத்தியானம் நான் வண்டிய எடுத்துட்டு வர்ற வரைக்கும் அடிதடி ஏதும் இல்லாம கண்ட்ரோலாதான் இருந்தாங்க.. இப்ப இங்கிருந்து கௌம்பறப்ப போன் பண்ணி கேட்டதுக்கு சாத்தையனோட ஏலக்காய் தோட்டத்த செரியன் ஆளுங்க எரிச்சுவிட்டுட்டதா சொல்றாங்க..." என்றவாறு அங்கும் இங்கும் திரும்பி, மற்றவர்களிடம் பணத்தை வாங்கி டிக்கட் கொடுத்தவாறே கவலை காட்டினார்.

"ஐயோ என்னாச்சு... என்ன தகராறு, ஏன் அப்படி செஞ்சாங்க?" வசந்தா தடுமாறினாள்...

"செரியனோட தாத்தா சிலை இருக்கே, அதை யாரோ சேதப்படுத்திட்டாங்க போல... சாத்தையன் க்ரூப் மேல சந்தேகம்... விசாரிக்கப் போன எடத்துல ஏதோ வாய் வார்த்தை முத்திப்போயி, எதாவது கைகலப்பு நடந்திச்சா என்னன்னு தெரில, இப்ப தகராறு இந்தளவுக்கு வந்து நிக்கிது..." என்றவர், "மொதல்ல நம்ம மேரியோட கல்யாணம் நாளைக்கு நடக்குமான்னு வேற தெரியல, பாவம்" என நகர்ந்து சென்றார்.

அவர் கூறிய எல்லா தகவலும் வசந்தாவுக்கு அதிர்ச்சியளிக்க, அப்படியே சாய்ந்துவிட்டாள். தாமஸும் இவளது ஊர்தான். அவர் கூறினால் தகவல் உண்மையாகத்தான் இருக்கும்.

ஊரின் ஒற்றுமை குலைந்து போனது பற்றிய கவலையோடு சேர்ந்து, வசந்தாவுக்கு இப்போது அவளது மகன் கண்ணா பற்றிய பதட்டமும், மேரியின் திருமணம் தடையாகிவிடக் கூடாதே எனும் பதைபதைப்பும் சேர்ந்துகொண்டது.

இவளைப் போலவே இவளருகில் இருந்து கேட்டுக்கொண்டிருந்த ஒரு பெண்மணியும் தாமஸின் பேச்சைக் கேட்டிருந்தவளாய் திகைத்து புடவை தலைப்பால் வாயை மூடிக்கொண்டு, 'ஆண்டவரே என்ன சோதனை இது?' என கலக்கம் காட்ட – அவளை அப்போதுதான் வசந்தா கவனித்தாள். வசந்தாவை போலவே அவளுக்கும் அறுபது வயது இருக்கும். விசேஷத்திற்கு செல்வதுபோல உடை அணிந்திருந்தாள். கலவையாய் பல கவலைகள் மனதுக்குள் சூழ, வசந்தா ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள், இப்போது அந்த கரும்புகைக் கூட்டம், மற்ற மேகங்களொடு கலந்து நிறம் மாறிக்கொண்டிருந்தது.

ஒற்றுமைக்கு உதாரணமாய் திகழ்ந்த ஊர். ஒரு காலத்தில் வெறும் காடாக இருந்த அப்பகுதியை தோட்டங்களாக மாற்றி, வெளியூரிலிருந்து வேலைக்கு ஆட்களை அழைத்து வந்து, குடியிருப்புகளை தோற்றுவித்து, ஓர் ஊராக மாற்றிய பெருமை ஜேக்கப் என்ற ஒரு செல்வந்தருக்கு உண்டு. தன்னிடம் பணிபுரிந்து தனக்கு உதவியாக இருந்த தனது உதவியாளர் கருப்பசாமியின் தங்கையை மணமுடித்து அந்த ஊரின் மத ஒற்றுமைக்கு அடிகோலியதும், அரசாங்கத்திடம் பேசி, அந்த ஊருக்கு தேவையான அனைத்து அடிப்படை வசதிகளை பெற்றுத் தந்ததும் அவர்தான். அவர் காலத்திலிருந்து இன்றளவு வரை மத வேறுபாடு பார்க்காமல் கலப்பு

மணங்கள் ஊருக்குள் இயல்பாகி இருந்தன.

ஜேக்கப்பின் செயல்களைப் போற்றும் விதமாவே ஊர் நடுவே - வசந்தாவின் வீட்டு முன்னால் இருக்கும் சிறிய திடலில்தான் அவருக்கு முழு உருவச் சிலையொன்றும் வைக்கப்பட்டிருந்தது.

அந்த ஜேக்கப்பின் பேரன்தான் செரியன். கருப்பசாமியின் பேரன் சாத்தையன்.

மூத்தவர்களைப் போலவே வழித்தோன்றல்களும் ஒற்றுமையாகத்தான் இருந்து வந்தனர். அது நேற்று வரை. இன்று ஏன் திடீரென மாறிப்போனது? யார் காரணம்? வசந்தாவுக்குள் பல்வேறு குழப்பான யோசனைகள்.

ஊருக்குள் நுழைந்த பேருந்து எல்லையிலேயே தடுத்து நிறுத்தப்பட்டது. மழை விட்டிருந்தாலும் தூறல் பலமாகவே இருக்க, அதைப் பொருட்படுத்தாமல் நனைந்தவாறே பெருங்கூட்டம் சாலை நடுவே குழுமியிருந்தது.

அநேகமாய் ஊருக்குள் இருந்த அத்தனை ஆண்களும் அங்கேதான் இருந்தனர், ஆனால் இருவேறு பிரிவுகளாய். ஏழெட்டு போலீஸ் தலைகள் தென்பட்டன. ஓரமாய் தீயணைப்புத்துறை வாகனமும், ஆம்புலன்ஸ் ஒன்றும் நின்றிருந்தது. வெளியூரிலிருந்து வந்திருந்த சில வாகனங்களும் ஆங்காங்கே தடுத்து நிறுத்தப்பட்டிருந்தன.

பேருந்துக்கு அருகே வேகமாய் வந்த சிலர், "வண்டி ஊருக்குள்ள போகாதுங்க, இறங்கி நடந்துடுங்க.." என பேருந்தின் பக்கவாட்டை பலமாய் தட்டி ஒருவித கலவரச் சூழலை எழுப்பியவாறு கடந்தனர். பேருந்திலிருந்த பயணிகள், என்ன நடக்கிறது என்பது புரியாமல் பதட்டமாகி அடித்துப் பிடித்துக்கொண்டு இறங்க - பொருட்களை வைத்துக்கொண்டிருந்தவர்கள் எப்படிப் போவதெனத் தெரியாமல் குழம்பி நின்றிருந்தனர்.

செரியனும், சாத்தையனும் தத்தம் ஆட்களுடன், இரு குழுக்களாகப் பிரிந்து நின்று, தங்களை சமாதானப்படுத்திக் கொண்டிருந்த போலீஸிடம் வாக்குவாதம் செய்துகொண்டிருந்தனர்.

"இப்ப ஊருக்குள்ள இருக்குறவங்கள்ல எவனோ ஒருத்தன்தான் சார் சிலைய உடைச்சிருக்கணும்... அவனை கண்டுபிடிக்கணும்னா ஊருக்குள்ள புதுசா யாரையும் உள்ள விட முடியாது சார்... எங்களுக்கு நல்லா தெரிஞ்ச உள்ளூர் ஆளுக வேணா ஊருக்குள்ள போவட்டும், மத்தவங்கள விடமுடியாது ஆமா..."

"எங்க தோட்டத்த எரிச்சவன் யாருன்னு எங்களுக்கு தெரியணும் சார், இவனுக கூட்டத்துல அது யாருன்னு கண்டுபுடிச்சு என்ன பண்றதுன்னு நாங்களே பாத்துக்கறோம்... நீங்க குறுக்க வராதீங்க"

"அதுக்கு முன்னால எங்க ஐயாவோட சிலைய சேதப்படுத்தினவன் யாருன்னு எங்களுக்கு தெரியணும் சார். அவனை நாங்களே கண்டுபுடிச்சு என்ன செய்யணுமோ செஞ்சுக்கறோம்..."

"அப்பறம் எதுக்குய்யா போலீஸ்னு நாங்க இங்க இருக்கோம்... நேத்து வரைக்கும் ஊருக்கு நல்லது செய்ய ரெண்டு பேரும் போட்டா போட்டி போட்டீங்க, ரைட், நாங்க குறுக்க வந்ததே இல்ல... இப்ப அடிச்சுக்கிட்டு சாக நிக்கறீங்களே... யாரு மேலிடத்துக்கு பதில் சொல்றது? இதோ பாருங்க, முதல்ல இதுக்கு காரணம் யாரு என்னன்கறதை நாங்க விசாரிக்கிறோம், ஒத்துழைப்பு கொடுக்க சொல்லுங்க உங்க ஆளுக எல்லாரையும்" என விபரீதம் ஏதும் நடந்துவிடாமல் இருக்க கவனமாய் பேசிக்கொண்டிருந்தது போலீஸ்.

பேருந்தை விட்டு இறங்கிய வசந்தா, மழைத்தூறல் நனைக்காமல் இருக்க, தலைக்கு புடவை முந்தானையை பிடித்துக்கொண்டு குழப்பத்துடன் சுற்றும்

முற்றும் பார்த்தபடி நடக்க – கூட்டத்தில் பலர் அவளைப் பார்த்து அவர்களையும் அறியாமல் பதைபதைப்பு காட்டினர்.

“டீச்சர்... நீங்க எதுக்கு இங்க வந்தீங்க?” என்றவாறு சாத்தையன் அவளை நோக்கி வர, போலீஸுடன் பேசிக்கொண்டிருந்த செரியன், வசந்தாவை பார்த்துவிட்டவராய், சாத்தையனை முந்திக்கொண்டு தனது ஆட்களிடம் சப்தமாய், “டேய், வசந்தா டீச்சரை நம்ம வண்டில கொண்டு போயி அவங்க வீட்ல விட்டுட்டு வாங்க” என்றதும், நடந்து வந்த சாத்தையன் பாதியில் நின்று, சைகையால் வசந்தாவுக்கு விடைகொடுத்துவிட்டு, செரியனை கோபமாய் முறைத்தபடி வேறுபக்கம் சென்றார்.

எல்லோருக்கும் வசந்தா டீச்சர் என்றால் அத்தனை மரியாதை. ஊரில் படித்தவர்கள் அனைவருமே தங்களது கல்வி வாழ்க்கையில் எங்கேனும் ஓரிடத்தில் இவளைக் கடந்துதான் வந்திருக்கவேண்டும். வசந்தாவின் வார்த்தைக்கு முக்கியத்துவம் அதிகம் தருபவர்கள் மட்டுமல்ல, அவள்மீது பரிவும் கொண்டவர்கள்.

ஆனால் இன்றையப் பிரச்சனையில் துவக்கப்புள்ளி எதுவெனப் புரியாமல், காரணம் என்னவென தெரியாமல் - தான் தலையிடுவது சரியாக இருக்காது, அதுமட்டுமல்ல தற்போது காவல்துறையின் விசாரணை துவங்கி விட்டதால், தான் இங்கே பேசுவதும் அர்த்தமற்றது மட்டுமின்றி வேறேதும் விளைவுகளை உருவாக்கி விடாமல் இருத்தல் அவசியம் என எண்ணிய வசந்தா – அவர்கள் ஏற்பாடு செய்திருந்த ஆட்டோவில் அமைதியாக ஏறிக்கொண்டாள்.

“காளியண்ணன் இங்கே வந்தாராப்பா?”

“இல்லீங்க டீச்சர், வரல... அவரு எப்போ உங்க வீட்டுத் திண்ணைய தாண்டி வந்துருக்காரு?” என்றபடி டிரைவர் ஆட்டோவை கிளப்ப முற்பட – பேருந்தில் வசந்தாவுக்கு அருகே அமர்ந்துவந்த பெண்மணி அவசரமாய் ஈரம் சொட்டச் சொட்ட வந்து நின்றாள். வசந்தாவிடம் பரிதவிப்புடன், “அம்மா, என்னையும் உங்ககூட அழைச்சுட்டு போங்களேன்... விடமாடேங்குறாங்க... நாளைக்கு காலைல எம் பையனுக்கு கல்யாணம்மா...”

அதற்குள் சிலர் விரைந்து வந்து தடுத்தனர், “டீச்சர் நீங்க மட்டும் கெளம்புங்க... இவங்க வெளியூர் ஆளு, வந்த வழிலேயே திரும்பி போவட்டும்”

“இவங்க மகனுக்கு ஏதோ கல்யாணம்னு சொல்றாங்களேப்பா...”

“இவ்ளோ பிரச்சனைக்கும் இவங்க ஆளுங்கதான் காரணமா இருப்பாங்களோன்னு எங்களுக்கு சந்தேகமா இருக்கு டீச்சர்... நீங்க கெளம்புங்க”

வசந்தா தயக்கமாய் அவர்களை ஏறிட - “பரவால்லீங்கம்மா... என்னால உங்களுக்கேன் சிரமம்... விதிப்படி நடக்கட்டும், நீங்க போங்க” என்ற அப்பெண்மணியின் விழிகளில் ஏமாற்றமும் கலக்கமும்.

ஏதோ யோசித்த வசந்தா, வண்டியை விட்டு இறங்கினாள், “பரவால்ல நானும் இங்கியே இருக்கேன்... பிரச்சனை முடியட்டும்”

“ஐயோ டீச்சரம்மா, இதெல்லாம் இப்ப முடியாது... நீங்க இப்ப இங்கேர்ந்து கிளம்பலன்னா எங்களைத்தான் ஐயா திட்டுவாரு, ஏறுங்கம்மா”

“அப்ப இவங்களையும் எங்கூட அனுப்புங்க... இவ்ளோ ஆம்பளைங்க இருக்குற எடத்துல இந்த வயசான அம்மா உங்களுக்கு என்ன பிரச்சனை கொடுக்கப்போறாங்கன்னு தடுக்குறீங்க?”

ஆட்கள் சிறிது தயங்க – சற்றே வயதான

ஒருவர், "டீச்சரம்மா சொல்றதும் சரிதான்யா, ஒத்த ஆளுதான... அனுப்பி வைங்க..." என்க,

"இப்படியே புதுசா வர்ற வெளியூர் ஆளுக எல்லாரையும் உள்ள விட்டுட்டா அப்பறம் எப்படி தப்பு செஞ்சவன புடிக்கறது, என்னவோ போங்க, எங்க போயி முடியப்போவுதோ இதெல்லாம்' என ஒருவர் குரல் உயர்த்த – போலீஸ்காரர் ஒருவர் கூட்டம் விலக்கி முன்வந்தார்.

"அவங்க கல்யாணத்துக்கு போலீஸ் பந்தோபஸ்து கேட்ருக்காங்கய்யா, அந்தம்மாவை போகவிடுங்க"

"உண்மை தெரியாம எப்படி சார்..." என ஓர் இளைஞன் கோபம் காட்ட – வயதானவர்கள் சிலர் அவனை அமைதியாக்கி, "போலீஸே சொல்லுதுல்ல, ஏதாவதுன்னா அவங்க பாத்துப்பாங்க, விடுங்க... அதான் அவங்க கூட டீச்சரும் போறாங்களே" என்றனர்.

அதிருப்தி மாறாமல் ஆட்கள் விலகி நகர, ஆட்டோவில் மீண்டும் வசந்தா ஏறினாள். நன்றியுடன் கைக்கூப்பி பார்வையால் நன்றி கூறியபடி அப்பெண்மணியும் கூடவே ஏறிக்கொண்டாள். ஆட்டோ கிளம்பியது. ஊருக்குள் செல்ல சில மைல்களை கடந்தாக வேண்டும்.

"எல்லாம் எங்க கெட்ட நேரம், இல்லன்னா ஒலகத்துல ஏதோ பொண்ணு கெடைக்காத மாதிரி இந்த ஊருக்குள்ள வந்தா வரன் முடியணும்... பையனுக்கு புடிச்சு போச்சு, என்ன பண்றது" ஆட்டோ குலுக்கலுக்கிடையே குரல் தடுமாற அப்பெண்மணி முகத்தை புடவை தலைப்பால் துடைத்துக்கொண்டாள். அவளது ஒரு கை ஒரு பையை உடலோடு இறுக்கி வைத்திருந்தது.

வசந்தா அவளைப் பார்த்தாள்.

"நாளைக்கு கல்யாணம்... சர்ச்ல... எங்க கல்யாண சனம் எல்லாரும் ஊருக்குள்ளதான் இருக்காங்க... நாந்தான் நகைய வாங்கிகிட்டு இன்னிக்கு பஸ்சுல வந்துடறேன்னு எல்லாரையும் முன்னாடி அனுப்பி வச்சேன் நேத்து..."

"யாரு பொண்ணு? எந்த வீடு?"

ஆட்டோ ஓட்டிக்கொண்டிருந்தவன் கண்ணாடியில் வசந்தாவைப் பார்த்து சற்றே அதிருப்தி படர்ந்த குரலில், "எல்லாம் அந்த மேரிதான்,.." என்க – வசந்தா நிமிர்ந்து பார்த்தாள்.

அவன் தொடர்ந்து, "இவங்க கல்யாணத்துக்கு வந்தவங்கள்லதான் யாரோ ஒரு ஆளு நேத்து ராத்திரி ஐயாவோட சிலைய ஒடச்சிட்டாங்களாம்..." என குற்றம் சாட்டுவது போல் பேச – வசந்தா கேட்டாள்,

"பாத்த சாட்சி இருக்கா? நல்லா தெரியுமா இவங்கதான்னு?"

"அப்படின்னு பேசிகிட்டாங்க டீச்சர், ஒரு சந்தேகம்தான்... போயி கேட்டதுக்கு கல்யாண வூட்ல தகராறு பண்ண வந்தீங்களான்னு அவங்க பதிலுக்கு கேக்கப்போயி, வாய் வார்த்தை முத்திப் போச்சு... அதுல ஒரு வெளியூர்காரனுக்கு வாய்த்துடுக்கு அதிகம் டீச்சர், 'எங்க கிறிஸ்ட்டின் ஆளுதானே ஜேக்கப்பு, அவரு சிலையை நாங்க என்ன வேணாலும் செய்வோம், இந்து ஆளுக நீங்க எதுக்குய்யா கேக்குறீங்கன்னு ஒருத்தன் பிரிச்சி பேசிட்டான் டீச்சர், அதான் கோவம் அதிகமாயிட்டு... எல்லாரும் ஒன்னுக்குள்ள ஒன்னுமண்ணா இருந்த பழக்கங்கறதுனால அடிதடி பெருசா நடக்கல... ஆனா பதிலுக்கு தோட்டத்த எரிச்சு விட்டுட்டாங்களே... சாத்தையனுக்கு பொருள் நட்டம், செரியனுக்கு கௌரவப் பிரச்சனை... எப்படி நாளைக்கு மேரி கல்யாணத்த நடத்த விடுவாங்க... அதுவும் அந்த மேரி உங்க..."

வசந்தா அவனை எச்சரிப்பது போல் நிமிர்ந்துப் பார்க்க – தொடர்ந்து ஏதோ

பேச வந்தவன் வசந்தாவின் பார்வையைக் கண்ணாடி வழியே பார்த்ததும் அமைதியானான்.

அந்தப் பெண்மணி அவன் பேசியதைக் கேட்டு இன்னும் பதட்டமாகி, அவளையுமறியாமல் கண்ணீர் விட்டாள். ஒருபக்கம் மகன் ஆசைப்பட்ட திருமணம் நடக்குமா எனும் தவிப்பு, இன்னொரு பக்கம் தங்கள் வீட்டு விசேஷத்திற்கு வந்தவர்களால் இத்தனை வருடமாய் இருந்து வந்த ஊரின் ஒற்றுமை நிலைகுலைந்து பழிச்சொல்லுக்கு ஆளாகிவிடுவோமோ எனும் பயம். வசந்தாவுக்கு அவளது நிலையைப் பார்க்க சங்கடமாய் இருந்தது. என்ன சொல்லி அவளை சமாதானப்படுத்துவது எனப் புரியாமல் அமைதியாக வந்தாள்.

அந்த பெண்மணியின் மகனுக்கு மணமுடிக்க இருக்கும் இதே மேரிதான், வசந்தாவின் மருமகளாக எப்போதோ வந்திருக்க வேண்டியவள். ஒரு மோசமான சம்பவம் காரணமாக அது நடக்காமல் போயிற்று. நான்கு வருடங்களுக்கு முன்னால் நடந்தவை அவளது நினைவுக்குள் வந்துபோயின.

“கவலைப்படாதீங்கம்மா... நல்லதுதான் நடக்கும்...” என்ற வசந்தா, ஊருக்குள் ஆட்டோ நுழைவதைக் கண்டு, “போற வழில தானே மேரி வீடு... அங்க இவங்கள இறக்கி விட்டுட்டு அப்பறம் என்னை கொண்டு போயி வீட்ல விட்ரு” என்றாள்.

மேரி வீட்டு வாசலில் பந்தலிடப்பட்டு, வந்திருந்த சில விருந்தாளிகள் சோகம் காட்டி அமர்ந்திருந்தனர். வீடு அமைதியாய் களையிழந்து இருந்தது. ஆட்டோ வரும் ஓசைக்கே பதறி நிமிர்ந்தனர்.

வீட்டு வாசலில் ஆட்டோ நிற்க – அந்தப் பெண்மணி இறங்கிக்கொண்டாள். அவளது ஆட்கள் அருகே வர, வசந்தாவைக் காட்டி, “இவங்க இல்லன்னா நான் வந்துருக்கவே முடியாது” என்றாள். ஒருவர் நன்றி சொல்ல – மற்றவர்கள் முகத்தில் எவ்வித உணர்ச்சியும் இல்லை. அவளை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றனர்.

வீட்டுக்குள் இருந்து ஒரு டாக்டர் வெளியே வந்து நின்று, கூடவே வந்த மேரியின் தந்தையிடம் ஏதோ சொல்லிவிட்டு அவரது இருசக்கர வாகனத்தில் ஏறிச்சென்றார். அவரை வழியனுப்பிய மேரியின் தந்தை, ஆட்டோவில் அமர்ந்திருந்த வசந்தாவை குற்றவுணர்வுடன் பார்த்து அருகே வந்தார்,

“வாங்க டீச்சரம்மா...”

“யாருக்கு உடம்பு சரியில்ல?”

“மேரிதான்... விஷம் குடிச்சிருச்சு...” என்றவர் பொங்கி அழ, வசந்தா அதிர்ந்து ஆட்டோவை விட்டு இறங்கினாள். உடன் வந்த பெண்மணி, “என்னங்க சொல்றீக...” எனப் பதற –

“நல்லவேளையா காப்பாத்திட்டோம்...”

வசந்தா விருந்தினர்களைக் கடந்து, உள்ளே சென்றுப் பார்க்க – மேரி படுக்கையில் கிடந்தாள். வசந்தாவைக் கண்டதும் அவளது விழிகளில் கண்ணீர் வழிந்தோடியது. வசந்தா அவள் அருகே சென்று கரம் பற்றி ஆறுதலாய் பார்த்தாள்.

“ஏன் மேரி?”

அருகிலிருந்த மேரியின் தாய் அழுதபடி பதிலுரைத்தாள், “கல்யாணம் நடக்காதுன்னு எல்லாரும் பேசிட்டிருந்தாங்கம்மா.... ரெண்டாவது தடவையும் இப்படி கல்யாணம் தடை படுதே, தனக்கும் கல்யாணத்துக்கும் ராசியில்லையோன்னு நெனச்சு பாவி இப்படி பண்ணிட்டா...” என்க – மேரி முகத்தில் குற்றவுணர்வு மேலிட வசந்தாவை பார்த்தாள்.

“நம்மளாலதான் இப்ப ஊரே ரெண்டுபட்டு கெடக்குறதா சொல்றாங்க,

இதுல என் அம்மாவே ஊருக்குள்ள வரமுடியுமான்னு தெரியல, இப்ப கல்யாணம் தேவையான்னு மாப்ள பையனும் நம்பிக்கையில்லாம பேசினாரு... அதான்...” பேச முடியாமல் மேரியின் தாய் அழுதாள்.

“கவலைப்படாதீங்க... தைரியமா இருங்க... நல்லதுதான் நடக்கும்” என்ற வசந்தா மேரியை பார்த்தாள், “நாளைக்கு காலைல நீ மணப்பொண்ணா நிக்கணும், நான் வருவேன்... இப்படி இல்லாம முகத்தை சந்தோஷமா வச்சுக்கணும், சரியா?”

மேரி மேலும் கண்ணீருடன் பார்க்க, வசந்தா விடைபெற்று வெளியே வர, கூடவே வந்த மேரியின் தந்தை, “டீச்சரம்மா, ஒண்ணு சொல்லணும்” என்றார் கெஞ்சலுடன் கூடிய, அவளுக்கு மட்டுமே கேட்கக்கூடிய ரகசியக் குரலில்.

“என்ன?”

“எங்க கல்யாணத்துக்கு வந்த சின்னக் குழந்தைங்க திடல்ல பந்து வீசி விளையாடிருக்காங்க, தெரியாம பட்டு...” அவர் தடுமாற –

“இதை அப்பவே எல்லார்கிட்டயும் சொல்லியிருக்கலாமே”

“அதுக்குள்ள பிரச்சனை பெருசாயிடுச்சும்மா, இனிமே சொன்னாலும் நம்ப மாட்டாங்க... ஏற்கனவே ஒருத்தருக்கொருத்தர் எல்லை மீறி பேசிட்டாங்க... என்ன பண்றதுன்னே தெரியல... உங்ககிட்ட சொல்லணும்னு தோணிச்சு... உங்களை இந்தக் கல்யாணத்துக்கு கூட கூப்பிடல... நான்...” எனத் தடுமாற்றம் காட்டி கலங்கியவர், அருகே மற்றவர்கள் வர,

“சரிம்மா, நீங்க பாத்து போயிட்டு வாங்க” என்றார்.

வசந்தா, யோசனையாய் ஆட்டோவில் ஏறி அமர்ந்தாள், ஆட்டோ கிளம்பியது.

மழைத் தூறல் அதிகரிப்பதும் குறைவதுமாய் இருந்ததே தவிர மழை விடுவதாய் இல்லை.

வசந்தாவின் வீட்டு வாசலில் ஆட்டோ நிற்க – இறங்கும்போதே எதிரே இருந்த திடலை கவனித்தாள்.

திடலின் மையமாய் இருந்த ஜேக்கப் சிலையின் வலது கை விரல்கள் காணாமல் போயிருக்க, அந்த இடத்தில் சிமிண்ட் உதிர்ந்து போயிருந்தன. சேதம் சிறியதுதான் என்றாலும் அது ஒருவகையில் கௌரவக் குறைவாகப் பட்டதால் உண்டான பிரச்சனை.

அந்த சிலைக்கு கீழே இருந்த படிக்கட்டில், குடையை பிடித்துக்கொண்டு காவலுக்கு அமர்ந்திருந்த ஒரு போலீஸ்காரர், இவளைக் கண்டதும் பணிவான புன்னகை காட்டி மரியாதை செலுத்தினார். திடலில் ஆங்காங்கே சிலர் நின்றிருந்தனர்.

வீட்டுக்குள் இருந்து காளி ஓடிவந்தார், “வந்துட்டியாம்மா?”

“கண்ணா எப்படியிருக்கான்?”

“நீயே உள்ள வந்து பாரு, இன்னிக்கு அவன் பண்ண காரியத்தை”

இருவரும் உள்ளே செல்ல – வீடு முழுக்க பொருட்கள் ஆங்காங்கே இறைந்து கிடப்பதை வசந்தா கவலையுடன் பார்த்தாள்.

வெளிப்பக்கம் பூட்டியிருந்த ஓர் அறைக்கதவை திறந்துப் பார்க்க – உள்ளே அறையின் மூலையில், வசந்தாவின் ஒரே மகன், இருபத்தியாறு வயது கண்ணா, உடைகள் கிழிந்திருக்க, முதுகு காட்டி படுத்திருந்தான்.

“இன்னிக்கு வெளில போயே ஆகணும்னு ஒரே அடம்... ஒரு தடவ சொன்னாலே புரிஞ்சுக்கிட்டு நடந்துக்கறவன், இப்பல்லாம் எத்தினி தடவ சொன்னாலும் பேச்சையே கேக்கறதில்லம்மா... சீக்கிரமா

வேற சிகிச்சை மாத்தணும்... சரிசெய்யணும்... ஊரே மெச்சுற மாதிரி கம்பீரமா ஓடியாடி திரிஞ்சிட்டிருந்த புள்ளை இப்படி கெடக்கற கொடுமைய இன்னும் எவ்ளோ காலத்துக்கும்மா நாம பாக்குறது?"

ஒரு சாலை விபத்தில் சிக்கி, நினைவுகளை இழந்து, மனநிலை பாதிக்கப்பட்ட மகனின் நிலையைக் கண்டு நான்கு வருடங்களாய் அழுது அழுது மரத்துப் போயிருந்த வசந்தா, பெருமூச்சுடன் காளியை பார்த்தாள், "கண்டிப்பா அடுத்த வாரம் பாத்துடுவோம்ணே... அவனை இப்படி கவனிச்சுக்குற உங்களை சாகுற வரைக்கும் மறக்கமாட்டேன்"

"அட என்னம்மா திடீர்னு வேத்தாள் மாதிரி எங்கிட்ட பேசுற? வீட்டு வேலைக்கு வந்த என்னை கூடப்பொறந்தவனா மதிக்குறியே அதுக்கே என் உசுரக் குடுக்கலாம்"

"ஒரு உதவி செய்ங்கண்ணே..."

"சொல்லும்மா"

மகனைப் பார்த்தபடி, "நான் செய்யப்போற ஒரு காரியத்துக்கு நீங்க துணையா நிக்கணும்... " என்றவள் ஒருவித தீர்மானத்துடன் அவனை ஏறிட்டாள், "சாத்தப்பனையும் செரியனையும் மேரி வீட்டுக்கு இப்பவே வரச்சொல்லணும்"

"அவங்க ரெண்டு பேரையுமா... அது... நீங்க சொன்னா மதிச்சு வருவாங்கதான்... ஆனா மேரி வீட்டுக்கு எப்படி இந்த சூழ்நிலைல? என்ன சொல்லி அவங்களை வரச்சொல்றது?"

"சிலையை உடைச்சது யாருன்னு தெரியும்னு சொல்லுங்க, வருவாங்க"

காளி திகைப்பாய் பார்த்துவிட்டு, ஏதோ புரிந்தவராய் வெளியே சென்றார்.

மழைத் தூறல் இப்போது புகை போல் மெலிதாய் நனைத்துக் கொண்டிருந்தது.

அடுத்த சில நிமிடங்களில், மேரி வீட்டு வாசலில் செரியனும் சாத்தையனும் வந்திருக்க, ஊரில் உள்ள முக்கிய நபர்கள் வந்திருந்தனர். அவர்களுக்கு நடுவே வந்து நின்ற வசந்தா, செரியனையும் சாத்தையனையும் பார்த்தாள்.

"என் வீட்டுக்கு எதிர்ல இருக்குற ஜேக்கப் ஐயாவோட சிலை, ஒரு பந்து வீசித்தான் உடைஞ்சிருச்சு..."

ஓரமாய் நின்றிருந்த மேரியின் தந்தை பதட்டமாய் பார்த்தார். அருகே இருந்த மேரியை பார்த்துக்கொண்டார், அவரது முகத்தில் கவலையும் பயமும் கூடியது.

"பந்து வீசி ஒடஞ்சிடுச்சா... யாரு வீசினது டீச்சர்.?"

"என்னோட பையன் கண்ணாதான்"

அதுவரை சலசலப்பாய் இருந்த அந்தபகுதி அடுத்த கணம் அமைதியானது.

"டவுனுக்கு போயிருந்த எனக்கு திரும்பி வந்தப்பறம் இப்பதான் தெரிய வந்துச்சு"

சாத்தையனும் செரியனும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். கூட்டத்தினரிடம் சலசலப்புகள் மீண்டும் எழத் துவங்கின.

"அடப்பாவமே, இது தெரியாம மேரி சொந்தக்காரங்ககிட்ட பிரச்சனை செஞ்சு, ஊரையே ஒரு கலவர பூமியாக்கிட்டோமே..."

"உண்மை என்னன்னு தெரியாம சாத்தையனோட தோட்டத்தை வேற எரிச்சு... வாய்க்கு வந்தபடி ஒருத்தர ஒருத்தர் துச்சமா பேசி... இந்நேரம் ரத்தக்காடா மாறியிருக்கும் நம்ம ஊரு"

"டீச்சர் சொல்றது சரிதான், நாமதானே பார்த்தோம், கொஞ்ச நேரத்துக்கு முன்னாடிதானே டவுன்லேர்ந்து வந்தாங்க..."

வசந்தா எவ்வித தயக்கமும் இன்றி பேசினாள், "எம் பையனால ஊருக்குள்ள

உண்டான இந்த நெலைமைக்கு நான் மன்னிப்பு கேட்டுக்கறேன்... அந்த சிலையை உடைச்சதுக்கு என்ன தண்டனையா இருந்தாலும் அதை எனக்கு கொடுங்க... அதேமாதிரி எரிஞ்ச தோட்டத்துக்கு என்ன செலவோ அதை கொடுத்துடறேன்...”

“அட, என்ன டீச்சர் நீங்க...” என்று சாத்தையன், செரியன் இருவருமே ஒன்றாய் முன்வந்தனர், “நீங்க சொல்லிக்கொடுத்த படிப்பும் பண்பும்தான் இந்த ஊர்ல நிறைய பேரை நல்லவங்களா வச்சிருக்கு, ஒத்துமையா வச்சிருக்கு... நீங்க நெனச்சிருந்தா இந்த உண்மைய உங்க வீட்டுக்குள்ளயே வச்சு மூடி மறைச்சிருக்கலாம், ஆனா இப்படி ஊர் நடுவுல வந்து நின்னு சொல்லி மன்னிப்பு வேற கேக்குறீங்க பாருங்க.. இப்ப நீங்க சொன்ன உண்மையால ஊர் மறுபடியும் ஒன்னாயிடுச்சு, நிக்கறதா இருந்த மேரியோட கல்யாணமும் நாளைக்கு நடக்கப்போவுது... நாங்க எல்லாருந்தான் உங்களுக்கு நன்றி சொல்லணும்”

மேரியும் அவளது குடும்பமும் பேச இயலாமல் கண்ணீர் பெருக்குடன் வசந்தாவிடம் வந்து நின்று கைகூப்பினர். வசந்தா புன்னகைத்தாள், “நாந்தான் சொன்னேன்ல, நல்லது நடக்கும்னு, நடந்திருச்சு பாருங்க”

“எரிஞ்ச தோட்டத்தை காப்பீடு செஞ்சிருக்கோம் டீச்சர், நல்லவேளையா மழை வந்து பாதிய அணைச்சுருச்சி... நீங்க அதைப்பத்தி கவலைப்படாதீங்க” என்ற சாத்தையனுக்கு நன்றி கூறிவிட்டு, தனது உணர்வுகளை உள்ளடக்கி, கலங்கிய விழிகளுடன் வசந்தாவும் வீட்டுக்கு கிளம்பினாள்.

வீட்டுக்குள் கண்ணாவுக்கு சாப்பாடு ஊட்டிக் கொண்டிருந்த காளி, வசந்தாவின் முகத்தை பார்த்தே நடந்ததை யூகித்து புன்னகை பூத்தார்.

மகனிடம் வந்த வசந்தா, அவனை அணைத்துக்கொண்டு இதுவரை அடக்கி வைத்திருந்த இறுக்கம் வெடித்து அழத்துவங்கினாள்.

வெளியே, மழை முற்றிலுமாய் விட்டிருந்தது.

rpjarticles@gmail.com ■



கவிதை

**சீ. பாஸ்கர்**

# உயிர் பெறும் வீடு

லேசாகத் திறந்திருக்கும்
ஜன்னலின் வழியே
தினமும் நுழையும்
சிறு பறவையொன்று
உயிர்ப்பித்துக் கொண்டிருக்கிறது
நீண்ட நாட்களாக
பூட்டியிருக்கும் பெரும் வீட்டை

baskee1981@gmail.com ■



கட்டுரை

நாகரத்தினம் கிருஷ்ணா

# மனிதர் வாழ்க்கையும் தேர்வும்

பிறப்பும் இறப்பும் அனைத்து உயிர்களுக்கும் பொது. விலங்குகள் கிடைத்ததை உண்பது, உண்டதைக் கழிப்பது, உறங்குவது, இனப்பெருக்கம் செய்வதென்று தங்கள் வாழ்க்கைக்கான பாதையை அமைத்துக்கொள்கின்றன. மனிதர்களின் சிந்திக்கும் திறனை *Cogito* என்ற கலைச்சொல்லால் பிரெஞ்சு தத்துவவாதி தெக்கார்த் *(René Decartes)* அழைக்கிறார். சிந்தித்தலே மனிதர் இருத்தலை உறுதிசெய்கிறது என்கிறார். முரண்நகையாக நா காக்காச் சிந்தனையாளர் ஆயுள் சீக்கிரம் முடிந்ததாக வரலாறு தெரிவிக்கிறது, சாக்ரட்டீஸ் ஒரு நல்ல உதாரணம். சென்னை விமான சுங்க இலாகா குடிவரவு முகவர்களின் தடுப்புப் பலகையில் “அதிகாரிகளுக்கு எதிரான வார்த்தைகள் பிரயோகிக்கும் பயணிகள் தண்டிக்கப்படுவர்” என எழுதப்பட்ட அறிவிப்பு. அதிகாரிகள் பயணிகளுக்கு எதிராகப் பயன்படுத்தும் சொற்களுக்குத் தண்டனை உண்டா என்பது பற்றிய விளக்கம் இல்லை.

உலகமெங்கும் பெருவாரியான மக்களுக்கு வாழ்க்கை பற்றிய கோட்பாடு சிக்கலற்றது. சாக்ரடீஸ் கூறுவதுபோல ‘வாழ்க்கை என்பது உயிர் வாழ்வது அல்ல, உயிர் வாழ்க்கையை நன்றாக வாழ்வது’. நன்றாக வாழ்வதென்பது சராசரி மனிதனுக்குக், காலம் காலமாக அவனைச் சுற்றியுள்ள சமூகத்தினால் தீர்மானிக்கப்பட்டது. நம்முடைய சமூகத்திற்கு வாழ்க்கை என்பது நன்றாகப் பிழைக்கத் தெரிந்திருப்பது: வீடு, மனைவி, மக்கள், வாகனங்கள் என வாழ்க்கையை அமைத்துக்கொள்வது. சாக்ரடீஸ் நன்றாக வாழ்வதை ‘விழுமியங்களால் வாழ்வது, விழுமியங்களுக்காக வாழ்வது’ என்கிறார். நடந்ததை நினைத்தோ, நடக்கப்போவதை எண்ணியோ மனதைக் குழப்பிக்கொண்டிராமல், நிகழ்காலத் தருணங்களுக்காக வாழ்வதும் ஐரோப்பிய சிந்தனையே. சராசரி மனிதனாகச் சமூக நீரோட்டத்தில் கலந்தாலும், காய்ந்த சருகுபோல மூழ்காமல் மிதந்து செல்லும் வாழ்க்கை உயர்ந்தது. கரை ஒதுங்கும் வாய்ப்பு நீரின் அடிப்பரப்பில் உருளும் கற்களைக் காட்டிலும் மேற்பரப்பில் மிதக்கும் காய்ந்த சருகுகளுக்கு அதிகம்.

வாழ்க்கைச் சுழற்சி மனிதர், விலங்கு, தாவரங்களென்கிற அனைத்து உயிர்களுக்கும் பொதுவென்கின்ற போதும், அதிக வேறுபாடில்லை என்கிறபோதும் வாழ்க்கைத்

தேர்வில் தாவரங்கள் முன்னிரண்டு விலங்கினத்தைக் காட்டிலும் மேம்பட்டவை. காரணம், அவை விதையாக மண்ணில் விழுந்தபின், காத்திருந்து, முளைத்து, செடியாகி, கன்றாகி மரமாகும் வரை பிறர் உதவியின்றி தன் இருத்தலை நிலைநிறுத்திக் கொள்ளும் ஆற்றல் கொண்டவை. பிறர் தயவின்றி காட்டிலோ பிறவிடங்களிலோ வளரும் வரம்பெற்ற இவைதான், வளர்ந்தபின் தன்னுடலில் காளான்களுக்கு இடமளிக்கின்றன. பறவைகளைத் தன் கிளைகளில் கூடு கட்ட அனுமதிக்கின்றன. இலைகளை, காய்களை, கனிகளை விலங்குகளும், மனிதர்களும் உண்டு மகிழ அவை கண்டு மகிழ்கின்றன. ஆனால் மனிதன் எப்படி? அவன் கருத்தரித்த நாள்முதல் பருவ வயது வரை உண்ண, உடுத்த, நடந்து பழக, உலகைப் புரிந்துகொள்ள, பெற்றவர்களும் மற்றவர்களும் உதவ வேண்டும். சரி... வளர்ந்தபின்? விலங்குகளுக்கே உரிய தன்னலமும் தன் சுற்றமும் மட்டுமே அவன் தேசம். பிற மக்களும் அவர்கள் வாழ்க்கையும் அவனுக்கு அன்னிய தேசம்.

இங்கேதான் மனிதரின் இயற்கைப் பண்பையும் வாழ்க்கைத் தேர்வையும் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது. ஐரோபியனோ, ஆசியனோ, அமெரிக்கனோ, நைஜீரியனோ, மலையாளியோ, தமிழனோ, கிறித்துவனோ, இசுலாமியனோ, பணக்காரனோ, ஏழையோ, படித்தவனோ, படிக்காதவனோ அனைவருக்கும் பசி, காமம், விருப்பு, வெறுப்பு, சாந்தம், கோபம் எல்லாமுண்டு.

இவ்விடயத்தில் மனித உயிர்களுக்குள் பேதமில்லை. ஆனால் இவற்றின் வாசலைத் தாண்டுவதில்தான் மனிதருக்குள் பேதங்கள். நேற்றுவரை மகரிஷி என்று அறியப்பட்ட மனிதர் அவருடைய பெண் சீடர்களிடம் தவறாக நடந்துகொண்டாரென செய்தித்தாளில் படிக்கிறபோது நமக்கு அதிர்ச்சி, அன்பை போதித்த சமயத் தலைவர் அவருடைய தொண்டர்களை ஆயுதமெடுக்கத் தூண்டுகிறபோது அதுதான் ஏன் என்ற கேள்வி. ஜெர்மன் தத்துவவாதி இம்மானுவல் காண்ட் (Immanuel Kant) என்பவருக்கும் இதுகுறித்த ஐயங்கள் எழுந்திருக்கின்றன. அவர் தேடலால் நமக்குக் கிடைத்த விளக்கம்: மனித உயிரி காந்தியும் கோட்சேயும் கலந்ததொரு பிறவி, கண்ணகியும் மாதவியும் கலந்ததொரு ஜீவன். அவன் பிறந்தபோது இராமனுமல்ல இராவணனும் அல்ல சராசரி மனித உயிர், வளர்ந்த பின்னர் சந்தர்ப்பச் சூழலுக்கேற்ப அவதாரம் எடுக்கிறான் அல்லது எடுக்கிறாள். அவனது இயல்பாக இதைத்தான் சார்த்துரு (Jean-Paul Sartre) என்கிற பிரெஞ்சுத் தத்துவவாதி மனிதர் இயல்பை அவன் இருத்தல்கள் முன்நிறுத்துகின்றன அல்லது தீர்மானிக்கின்றன என்கிறார்.

மனித உயிரியின் இயற்கைப் பண்பை (Human Nature) அவரவர் தகைமைப் பண்பு (Adaptive behavior) கோலோச்சுகிறது. தகைமை என்பது உயிரினங்கள் தம்மை சூழலுக்கு ஏற்றவாறு கட்டமைத்துப் புதிய வடிவம் பெறுவது, செயலை அரங்கேற்றுவது. திரைக்குப் பின்னிருந்து அம்மனித உயிரியை இயக்குபவை, அவன் சார்ந்த சமூகமும், இதுநாள்வரை பெற்ற படிப்பினையும், சந்தர்ப்ப சூழலும் சமூக உயிரினங்களின் உயிர்ப்பில், செயல்பாட்டில் தகைமை இயல்பு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஒரு முக்கிய பங்காற்றுகிறது. அந்த வகையில் தகைமையும் ஒரு மனித ஜீவனின் உள்ளாற்றலாக இருந்து செயல்படுகிறது. பசி ஓர் உயிரியின் அத்தியாவசியத் தேவை, ஆனால் சோறா ரொட்டியா இரண்டில் எதையுண்டு பசியாறலாம், அது ஏன் என்பதை தகைமை

தீர்மானிக்கிறது. பார்வையற்ற மனிதர் ஒருவர் சாலையின் மறுபகம் செல்ல காத்திருக்கிறார், பல மனிதர்கள் ஏதேதோ காரணங்களை முன்னிட்டு அவரைக் கடந்துசெல்ல ஒரு சிலரே உதவ முன்வருகின்றனர். அங்கு உதவ முன்வந்த மனிதரிலும், ஒருவர் அவருடனிருக்கும் காதலி, தன் செயலை மெச்சவேண்டும் என்பதற்காக உதவி இருப்பார். ஆக மனிதர்களின் முடிவுகள் எதுவாயினும் தீர்மானிப்பது தகைமை. மனிதரில் பலர் உழைத்து சம்பாதிக்கிறார்கள், ஒரு சிலர் ஏய்த்துப் பிழைக்கிறாகள். அவர்கள் வாழ்க்கைத் தேர்வு அப்படி. “அறத்தாறிதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோ டூர்ந்தான் இடை” என்கிறது குறள். இந்த அறம் வேறொன்றுமல்ல - தேர்வு. பல்லக்கு சுமப்பவனும், அமர்ந்திருப்பவனும் அவரவருக்கு எது வேண்டுமோ அதை தேடிப்பெற்றிருக்கிறார்கள். இத்தருணத்தில் நமது இடமென்ன? என்ற கேள்விக்குண்டான பதில் அதற்கு முந்தைய தருணம் வரையிலான நமது தேர்வுகளின் அடிப்படையில் பெறப்பட்டது. கோளும் நாளும் அதனதன் விதியை அவைகளே எழுதிக்கொள்கின்றன. அறுபது நொடி, அறுபது நிமிடம், இருபத்து நான்கு மணிநேரமென்று ராசிபலன் பார்க்காமல், சனீஸ்வரன் கோயிலைச் சுற்றாமல் தம்மை மட்டுமே கருத்தில்கொண்டு நாட்கள் முன்நகர்ந்து கொண்டுதானிருக்கிறன. இவர் நம்ம ஆள் அதனால் நல்லது செய்ய வேண்டுமென்றோ, அவர் எதிர் தரப்பு ஆள் அவருக்குத் தீங்கு செய்யவேண்டுமென்ற திட்டமெல்லாம் நாளுக்கில்லை. நமது வாழ்க்கைக்கு அவை எவ்விதத்திலும் பொறுப்பல்ல. தீதும் நன்றும் பிறர் தர வருவதல்ல.

நம்மால் தேர்வு செய்யய்யப்பட முடியாதது மூன்று: பெற்றோர்கள், இனம், மொழி இவற்றைத் தவிர பிற அனைத்தும் தேர்வுசெய்ய முடிந்தவைதான். கல்வி, வேலை, வாழ்க்கைத்துணை, நண்பர்கள், படிக்கும் புத்தகங்கள், நெறிகள், முரண்கள், சண்டை, சமாதானம், சவடால் பேச்சு, கோபம், அமைதி, சிரிப்பு அழுகை என இப்பட்டியலை முடிக்காமல் நீட்டிக்கொண்டே போகலாம். ஒவ்வொரு வினையும் அவ்வினையின் பலனும் எதிரெதிர் பண்புகளைக் கொண்ட இரு தனிமங்களொன்றின் தேர்வை சார்ந்தது. இத்தேர்வில் எனக்குச் சாதகமானதென்ற கருத்தியத்தின் அடிப்படையில் ஒரு தேர்வையும் எனது பாதகத்தைத் தரும் என்ற கருத்தியத்தின் அடிப்படையில் மற்றொன்றையும் தேர்வு செய்கிறோம். அதாவது பின்னதும் ஒருவகையில் தேர்வு என்றாகிறது. எனினும் இந்த இரண்டாம் வகை தேர்வுக்கு நிராகரிப்பு என்று பெயர். வேண்டாமென்று முகம் சுளிப்போம், போதும், மிக்க நன்றிங்க என நாகரீகமாகவும் மறுக்கக் கூடும், கடுமையாக விவாதிக்கலாம். தள்ளி நிற்கலாம், ஒதுங்கிப் போகலாம், சிலநேரங்களில் ஓடவும் செய்யலாம். தேர்வுக்கு அறிவு, புலன் இரண்டும் துணை நிற்கின்றன, குறள் சுட்டும் பல்லக்கில் ஊர்பவன் அறிவினைக் கொண்டு தேர்வு செய்திருக்கலாம். இருந்த போதிலும் அதை சாசுவதப்படுத்திக் கொள்ள ஒவ்வொரு நாளும் அவனது தேர்வு சரியானதாக அமையவேண்டும்.

“நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெட புழுதியில் எறிவதுண்டோ? சொல்லடி சிவசக்தி என்னைச் சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்! வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே!” என்கிறான் பாரதி. தகைமைப் பெரிதும் புலன்களைச் சார்ந்தது, இதனைத் தவிர்க்க மனிதர் வாழ்க்கையில் தேர்வென்று வருகிறபோது அதிகம் உணர்ச்சிக்கு இடங்கொடாது அறிவை பயன்படுத்துதல் வேண்டும்.

nakrish2003@yahoo.fr ■

எழுத்து

- தமிழிலக்கிய அமைப்பு

அன்பென்று கொட்டு முரசே!

## விளம்பரம்

## "எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு

**திருமதி சௌந்தரா கைலாசம் இலக்கியப் பரிசு**
**2024ம் ஆண்டுக்கான**
**ரூ.2,00,000/- (ரூபாய் இரண்டு இலட்சம்) பரிசுக்கான**
**நாவல் போட்டி!**

சிறந்த கதையம்சம் நிறைந்த நிகழ்கால சமூகப் பிரச்சனைகளைப் பிரதிபலிக்கிற நவீனத்துவம் நிறைந்த இதுவரை வெளிவராத புதிய படைப்புகள் வரவேற்கப்படுகின்றன. கணினி அச்சிட்டு "ஸ்பைரல் பைண்டிங்" செய்யப்பட்டு, 1x8 டெமி அச்சில் 200 பக்கம் முதல் 250 பக்கங்கள் வரையிலான பிரதிகள் மூன்று அனுப்ப வேண்டும்.

போட்டி தொடர்பான பரிந்துரைகள், கடிதங்கள் ஏற்கப்பட மாட்டாது. நடுவர் குழு மற்றும் அறங்காவலர் குழுவின் முடிவே இறுதியானது.

படைப்புகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : ஏப்ரல் 30, 2025

**நாவல்கள் அனுப்ப வேண்டிய முகவரி**

"எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு,
3C – "எல்டோராடோ"
112-A, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை – 600 034.
தொலைபேசி : 044 – 28270931
செல் : 9486361884, 9841440410



சிறுகதை

வெ.மஹாதேவன்

# இயற்கைக் காட்சிகள்

மலைப்பாதையில் பூஜாவுக்காகக் காத்திருந்தேன். நேரம் தவறாத மாணவிதான் அவள். மேடம் மேடம் என்று வகுப்பு ஒன்றிலிருந்தே என்னைச் சுற்றி வருபவள். பனிரெண்டாம் வகுப்பு இறுதித் தேர்விற்கான ப்ராஜக்ட் சம்பந்தமாக மூலிகை ஒன்றைத் தேடி வருகிறாளாம் அவள். அது இந்த மலையடிவாரத்தில் தான் உள்ளதாக அவள் தகவல் சேகரித்திருக்கிறாள். வலைத் தளங்களின் வழியேதான். அதை அடையாளம் கண்டு சேகரிக்க என் உதவி வேண்டுமென்றாள் அவள், சென்ற வாரத்தில் ஒரு நாள். இந்த ஞாயிறு தான் நேரம் ஒதுக்கியிருந்தோம். நான் வந்து சேர்ந்து ஐந்து நிமிடம்தான் ஆகியிருந்தது... சாலையைப் பார்த்தபடி இருந்தேன். என் கவனம் கலைய,

அதோ கையசைப்பது அவள் தான். பூஜா...

“மேடம்...”

“எஸ் பூஜா” என்று கையுயர்த்தினேன்.

அவள் மலைப்பாதையில் ஏறி, மூச்சு வாங்க வாங்க என்னை வந்தடையும் வரை சுற்றுப்புறங்களை ரசித்த வண்ணமிருந்தேன். என்னை வந்தடைந்த அவள்,

“ஓ! மேடம்...ஸ்...” என்று மூச்சிரைத்தாள்.

“மெல்ல மெல்ல” என்று சாந்தப்படுத்தினேன்.

“சற்று உட்காருவோம். வா. உன் மூச்சிரைப்பு அடங்கட்டும்”

“ஓ! ஸ்....” என்று இன்னும் மூச்சிரைப்பு அடங்காமல் தவித்தாள் அவள். இருவரும் பசுமைக்கிடையே தென்பட்ட பாறையில் அமர்ந்துகொண்டோம்.

ஹேண்ட்-பேக்கிலிருந்து தண்ணீர் பாட்டிலையெடுத்து அவளிடம் நீட்டினேன்.

“சாரி மேடம், கொஞ்சம் தாமதமாகிவிட்டது...” தண்ணீர் பருகியபடியே அவள் என்னிடம் மன்னிப்புக் கேட்க,

“ஓ! ஒன்றும் இல்லை. நானும் வந்து இப்பொழுதுதான் ஐந்து நிமிடமாகிறது...”

“ஒன்ஸ் எகைன் சாரி... என் வேலை நிமித்தமாக வந்துள்ள உங்களைக் காக்க வைத்துவிட்டேன்.”

"சரி... சரி... வா... அப்புறம் வெயில் அதிகமாகிவிடப் போகிறது... மூலிகையைக் காட்டு, தேடலாம்."

அவள் செல்ஃபோனில் ஃபோட்டோவிலிருந்த மூலிகையை எனக்கு அடையாளம் காட்டிய வண்ணமிருந்தாள். மலையடிவாரத்தில் காணப்பட்ட கொட்டில் ஒன்றில் அருகருகே கட்டப்பட்டிருந்த அந்த இரண்டு விலங்குகளின் செயல் சட்டென்று என் கண்ணில் பட்டது... எனக்கு அது ஒரு விசித்திரமான காட்சிதான். பூஜாவின் கண்களில் அது பட்டுவிட்டதா என்று நான் அவளைக் காண, அவளோ அதை தன் செல்லில் படமெடுப்பது கண்டு வியந்தேன் நான்.

"பூஜா..." என்று குரல் எழுப்பினேன்.

"என்ன செய்கிறாய்?"

"அபூர்வ காட்சி மேடம், போட்டோ எடுத்து வலைதளத்தில் அப்லோட் செய்யப்போகிறேன்."

"வேண்டாம் பூஜா, வந்த காரியத்தைப் பார்ப்போம். வா" என்னையறியாமல் அவளை இழுத்துக்கொண்டு மலைப்பாதையில் விறுவிறுவென்று நடந்தேன். என் செயல் எனக்கே வியப்பாய் இருக்க,

"ஏன் மேடம், என்ன தப்பு?" புரியாமல் உடன் வந்தாள் பூஜா.

"பாவம் மிருகங்கள்.... அவை என்ன அறியும்? அருகருகே கட்டப்பட்டிருக்கின்றன". மறுபடியும் என் வாதம் எனக்கே வியப்பாய் இருந்தது...

"மூலிகை, என் ப்ராஜக்டிற்காக நான் தேட வந்திருக்கலாம் மேடம். ஆனால் நான் மற்ற எல்லா மாணவியரையும் போல உங்களின் பயாலஜி ஸ்டூடண்ட் தான்... உங்களால் பயாலஜியில் இன்ஸ்பயர் ஆன அவர்களில் பலரைப்போல் ஒருவள்..."

"ஆமாம் ஆமாம், நான் மறுக்கவில்லை, ஆனால் வா, எங்கே அந்த உன் மூலிகையைக் காட்டு தேடத் துவங்கலாம்"

"இதோ" என்று மீண்டும் அவள் ஃபோட்டோவிலிருந்த இலைகளைக் காட்ட,

"வா, மலைமுகடு வரை தேடலாம்"

"அவ்வளவு தேட அவசியமில்லை மேடம். இட் ஈஸ் ப்ளண்டி ஹியர், அங்கே பாருங்கள்."

தேடி வந்த மூலிகைகளைக் காட்டினாள் அவள்.

இருவரும் சற்று தூரம் சென்று, வேண்டிய மூலிகைகளைப் பறித்துக்கொண்டு மலைப்பாறையில் அமர்ந்தோம். கொட்டிலில் இருந்த அந்த இரு விலங்குகளும் இப்போது எப்போதும் போல் இருக்க,

"ஏன் மேடம், நான் எடுத்த வீடியோவை அப்லோட் செய்ய வேண்டாமென்கிறீர்கள்?" - பூஜா.

"எல்லாமே, எல்லோராலும் அறியப்பட வேண்டுமா பூஜா?"

"புரியவில்லை மேடம்"

"இன்று நாம் கண்ட காட்சி, நாமிருவர் மட்டுமே அறிந்த ஒன்றாக ஏன் இருக்கக் கூடாது?"

"மறுபடியும் புரியவில்லை மேடம்"

"எனக்கென்னவோ இந்தக் காட்சி நம்முடனேயே இருக்கட்டும் என்று தோன்றுகிறது.... அறிவியலும் உடலியலும் உங்களுக்கு விலாவாரியாக போதித்த நானா இப்படி நினைக்கிறேன்? அவைகளின் அந்தச் செயல் என்னை விவாதங்களுக்கும் அறிவுப்பூர்வமான ஆதாரங்களுக்கும் அப்பாற்பட்ட ஒன்றாக பாதுகாக்கத் தோன்றுகிறது... வேண்டாம், நம்மைத் தவிர வேறு யாரும் அதை அறிய வேண்டாம்... அந்த வீடியோவை அழித்துவிட்டாய் தானே?"

"இதோ மேடம்...." செல்லில் அவள்

வீடியோவை அழித்துக் கொண்டிருந்தாள்.

நல்ல பெண். பிடிவாதமோ மறுப்போ காட்டத் தெரியாதவள்.

“ஆச்சு மேடம், அழித்துவிட்டேன். வேண்டுமானால் நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்” செல்லை என்னிடம் அவள் நீட்ட,

“உன்மேல் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது பூஜா, தேங்க்ஸ்.” அவள் கைகளைப் பற்றிக்கொண்டேன்.

இருவரும் கைகளைப் பற்றிய வண்ணம் மலையடிவாரச் சாலைக்கு வந்தோம்.

“மேடம் நாம் கைகளை விடுவித்துக் கொள்ளவில்லையென்றால் நம்மையும் விலங்குகளைப் போல் பார்க்கப் போகிறார்கள். சாலை வந்துவிட்டது” என்றாள் பூஜா.

சிரித்த வண்ணம் அவள் கைகளை விடுவித்தேன். “யூ நாட்டி கேர்ள்”.

பஸ்ஸிற்காக காத்திருந்தபோது இருவரும் பேசவில்லை.

“மேடம், உங்கள் பஸ் வந்துவிட்டது... கிளம்புங்கள்” - பூஜா

“ஓ, ஷ்யூர், நாளை பார்க்கலாம். பை”

“பை மேடம் தேங்க்ஸ்”

பஸ்ஸில் அமர்ந்தகையுடன் பூஜாவுக்கு ஒரு செய்தி அனுப்பினேன்.

“டியர் பூஜா,

*‘இன்று நாம் கண்ட காட்சி, நான் செய்திகளிலோ வலைதளத்திலோ இதுவரை கேட்டோ, கண்டோ அறியாத ஒன்று. அதனால்தான் என் உள்ளம் அதை ரகசியமாகவே வைத்திருக்க விழைகிறது... என் உள்ளத்தை சரியாக புரிந்துகொண்டு நீ என் கட்டளைக்கு உடன்படிந்து படமாக்கியதை அழித்து என்னிடம் உள்ள பக்தியை நிரூபித்தாய். அந்தப் புரிதலில்தான் நான் உன் கைகளைப் பற்றியது... ஆறறிவில்லாத விலங்குகளுக்கு இந்தப் புரிதல் ஏது? என்ற குழப்பம்தான் என்னை ஆட்கொண்டுள்ளது... வீடியோ காட்சியைப் போன்றே மனத்திலிருந்தும் மலையடிவாரத்தில் கண்டதை மறந்து விடு’.*

யுவர்ஸ்

க்ரேஸ்.

என் மெஸேஜைப் படித்தவுடன் பதில் அனுப்பியிருந்தாள் பூஜா.

“டியர் மேடம்,

*‘எனக்கும் இன்று கண்ட காட்சி புதிதாகத்தான் இருந்தது... அதனால்தான் நான் அதைப் படமெடுத்ததும், பலரும் காண வலைதளத்தில் அப்லோட் செய்ய எண்ணியதும். ஆனால், உடல் கூற்றையும் ஏன் உடலுறவையுமே கூட பாடத்திட்டத்தில் உள்ளது என்ற ஒரே காரணத்திற்காகவே விலாவாரியாக மாணவிகளான எங்களுக்குப் புரிய வைப்பதில் நிபுணரான நீங்கள், இன்று அடைந்த மனக்கிலேசம்(?) எனக்கு மிகவும் புதிதாக இருந்தது... உங்களது விளக்கங்களால் உடலியல் புரிந்து ஆர்வமடைந்து மருத்துவக் கல்லூரியில் சேர்ந்துள்ளோர் எத்துணை பேர்? ஏன், நானும் அடுத்த வருடம் மருத்துவம்தானே தேர்ந்தெடுக்க உள்ளேன். அவ்வாறிருக்க, பாடத்தில் பயில்வதற்கும் நேரில் காண்பதற்கும் உள்ள இடைவெளியை இன்று தங்களால் உணர்ந்துகொண்டேன்.*

*விலங்கிலிருந்தும் குரங்கிலிருந்தும் வந்தவன் மனிதனாக இருக்கலாம். விலங்கிற்கும் குரங்கிற்கும் மனிதனுக்கும் அனைத்திற்குமே நாம் இன்று கண்ட காட்சி பொதுவானதாகவும் பொருந்தாததாகவும் இருக்க வேண்டும். இல்லையென்றால் பாடத்தை அலசி ஆராய்ந்து ஆணித்தரமாய் விளக்கும் நீங்கள் ஆடிப்போய் அழித்துவிடு, அழித்துவிடு என்று அலறாத குறையாகத் தவித்தது ஏன்? பாடத்தில் புரிந்துகொண்ட நீங்கள், நேரில் பதறியது ஏன்? மனிதரைப்*

*புரிந்துகொண்ட நீங்கள், விலங்குகளைப் பிறர் கண்களிலிருந்து காப்பாற்ற நினைத்ததேன்?*

*எத்துணையோ 'ஏன்?'களைப் போல் இவையும் விடையில்லாத 'ஏன்'களாகத்தான் இருக்க வேண்டும். மனிதருக்குத்தான் 'ஏன்?'களும் அதற்கான விடைகளும் விடையில்லாத 'ஏன்?'களும். விலங்கினத்திற்கு இவையேதுமில்லை...*

*மலையின்மீது இன்று தங்களை வித்தியாசமான ஆசிரியராக உணர்ந்தேன்.*

*யுவர்ஸ்*

*பூஜா.*

*'நீயும் வித்தியாசமானவள் பூஜா' என்று செய்தியனுப்பினேன் நான்.*

sureshmahadevan62@gmail.com ■



கவிதை

**ஆர். வத்ஸலா**

# பத்திரம்

சாத்திரப்படி
பூமி பூசை போட்டு
வாஸ்து சாஸ்திரப்படி
கட்டப்பட்ட குடியிருப்பின்
வெளிச்சுவரில் பெரும்பான்மை
சொந்தக்காரர்கள்.
ஜனநாயக முறைப்படி
தேர்ந்தெடுத்த
அழகு வண்ணக் குழம்பை
பூசுகிறான்
அரைபட்டினியால் இளைத்த
உருவத்துடன் ஒருவன்
முழம் கயிற்றில் தொங்கிக் கொண்டு
பக்கத்துச் சுவரில் தொங்கும்
இன்னொருவனிடம் பேசி சிரிக்கிறான்
இந்தியாவின்
ஏதோ ஒரு மூலையில் உள்ள
சிற்றூரின் வட்டார மொழியில்
பல வண்ணச் சுண்ணாம்பில்
குளித்திருக்கும்
அவனது கருப்புச் சட்டைப்பையின்
கைபேசியிலிருந்து பரவும்
அவனுக்கு புரியாத ஒரு மொழி பாடலை
கேட்டுக்கொண்டே
அவன் பேசுவது
துளசிதாசரின் அவத் மொழியா
அல்லது
கபீரின் போஜ்புரியா
என்று சிந்தித்துக்கொண்டே
அலுவலகம் கிளம்பும் முன்
கார் சாவியை எடுக்க வரும்
மகனிடம் கூறுகிறேன்
பத்திரம்

vatsala06@gmail.com ■



கட்டுரை
கவிதைக்காரன் இளங்கோ

# சத்தியவான்களின் சமூகப் பங்கீடாகும் திரு.மாணிக்கம்

**(திரைமொழிப் பார்வை)**

இயக்குநர் நந்தா பெரியசாமியின் இயக்கத்தில் வெளிவந்திருக்கும் திரைப்படம் திரு.மாணிக்கம். இயக்குநருக்கு இது ஆறாவது திரைப்படம். 2024-இன் டிசம்பர் இறுதியில் திரைக்கு வந்திருக்கிறது. ஒளிப்பதிவு எம்.சுகுமார், படத்தொகுப்பு குணா, இசை விஷால் சந்திரசேகர்.

மாணிக்கத்திற்கு உறவென மனைவி சுமதி, இரண்டு பெண் குழந்தைகள், மனைவியின் தம்பி மற்றும் மாமியார் என ஒரு சிறிய குடும்பம் உள்ளது. மலையாளமும் தமிழும் கலந்த கேரளாவின் குமுளி டவுனில், பேருந்து நிலையத்தினருகே சிறிய லாட்டரி கடை ஒன்றை வைத்திருக்கிறான். அவன் பழகுவதில் எல்லோருக்கும் இனியன், அன்பன். தன் பிள்ளைகளுக்கு நல்ல தகப்பன். நாற்பது வயதைக் கடந்த ஒரு சாமானியன். நடுத்தர வர்க்கத்து மனிதன்.

இரண்டாவது மகளுக்கு திக்குவாய். மருத்துவம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அறுவைச் சிகிச்சை தேவைப்படலாம் என்பது நிலைமை. ஆனால் அதற்கான வயது இன்னும் ஆகவில்லை என்பதால் காத்திருக்க வேண்டும். அதற்கும் முன்னதாகவே 'அவளைப் பேசச்சொல்லித் தூண்டிக்கொண்டே இருங்கள், பேச்சு கொடுப்பதை நிறுத்தாதீர்கள்' என்கிறார் டாக்டர்.

மாணிக்கத்தின் மச்சான் மெக்கானிக் கடை வைத்திருக்கிறான். அயல்நாட்டிற்கு வேலைக்குப் போய் சம்பாதிக்க வேண்டும் என்று காத்திருப்பவன். ஏற்கனவே ஓர் ஏஜென்டிடம் பணம் கொடுத்து ஏமாந்து நிற்கிறது அக்குடும்பம். அது வட்டிக்கு வாங்கிய பணம். அதிலும் ஒரு போலீஸ்காரரிடம் வாங்கியது. பணத்தை உடனடியாகத் திருப்பிக் கொடுத்தாக வேண்டிய நெருக்கடி இருக்கிறது. அவளுடைய தாய்மாமா ஷேர் மார்க்கெட் தரகராக இருப்பவர். பணத்தை பங்குசந்தையில் முதலீடு செய்தால் குறுகிய காலத்தில் லாபம் ஈட்டிவிடலாம் என்னும் ஆலோசனையை சதாகாலமும் சொல்லிக்கொண்டே இருப்பவர்.

இந்தச் சூழ்நிலையில், மாணிக்கத்தின் கடையை அதன் உரிமையாளர் திருப்பிக் கேட்கிறார். புதிய கடைக்கு மூன்று லட்சம் ரூபாயாவது தேவைப்படுகிறது. இப்படி ஒன்றன்மேல் இன்னொன்றாக பிரச்சினைகள் அத்தனையும் ஒரே நேரத்தில் அழுத்தம் கொடுப்பதால் மாணிக்கம் மனதளவில் முடங்கிப்போய் உட்கார்ந்துவிடுகிறான். சுமதி கைவசம் மிஞ்சியிருக்கும் ஒரே தங்க நகையான தாலிச்சங்கிலியை அவனிடம் கொடுத்து அடமானம் வைத்து அப்போதைக்கு பிரச்சினையை முடிக்கச் சொல்லுகிறாள்.

இப்படியிருக்க, ஒருநாள் முதியவர் ஒருவர் பேருந்து நிறுத்தத்தில் முகம் நிறைய சோகத்துடன் உட்கார்ந்திருக்கிறார். ஏனென்றால் அவருக்கு குடும்பத்தில் பிரச்சினை. மகளைத் திருமணம் செய்துகொடுத்த வீட்டில் மாப்பிள்ளையும் சம்பந்தி அம்மாளும் கூடுதல் வரதட்சணை பணம் கேட்டு அவளைத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். மகள் கர்ப்பமாக இருக்கிறாள். தாமதித்தால் மாப்பிள்ளைக்கு வேறு இடத்தில் கல்யாணம் செய்து முடித்துவிடுவேன் என்கிற கெடு வைக்கிறார்கள். கர்ப்பவதியான மகளையும் நோயாளியான மனைவியையும் எப்படி பாதுகாப்பது? பணப் பிரச்சினையை எப்படித் தீர்ப்பது? மனம் முழுவதும் துக்கம் வியாபித்திருக்க, திக்குதிசை புரிபடாத குழப்பத்தோடு மெல்ல எழுந்து தள்ளாடியபடியே மாணிக்கத்தின் கடைக்கு வந்து சேர்கிறார். லாட்டரி சீட்டுகளை தேர்வுசெய்து வாங்குகிறார். ஒவ்வொன்றிலும் பரிசு விழுந்தால் தனக்கிருக்கும் ஒவ்வொரு பிரச்சினையாகத் தீர்த்துவிடுவேன் என்று அவற்றை விவரித்தபடி சிரித்துக்கொண்டே அவனிடம் சொல்லுகிறார். அவருடைய குரலில் விரக்தியே தொனிக்கிறது. மாணிக்கம் புன்னகைத்தபடி அந்த லாட்டரி சீட்டுகளை ஒரு கவரில் போட்டு அவரிடம் கொடுக்கிறான்.

பணம் கொடுப்பதற்காக பெரியவர் தன் மடியைத் தடவுகிறார். வேட்டியில் மடித்து வைத்திருந்த பணத்தைக் காணவில்லை. பதட்டமடைகிறார். பரிதவிக்கிறார். அவருடைய உடல் தள்ளாட்டத்தைப் பார்த்து மாணிக்கம் அவரை நிதானப்படுத்த முயற்சிக்கிறான். சற்று உட்காரச் சொல்லி லாட்டரி சீட்டுகளை அவரிடம் கொடுக்கிறான். ஆனால் அதை வாங்க மறுத்துவிடுகிறார். மாணிக்கம் பரவாயில்லை என்று வற்புறுத்துகிறான். 'அப்படியென்றால் நாளை வந்து பணம் கொடுத்துவிட்டு வாங்கிக்கொள்கிறேன். அதுவரை உங்களிடமே இருக்கட்டும்' என்கிறார். சரி என்றபடி மாணிக்கம் பெரியவரின் வழிப்பயணத்திற்கு இருநூறு ரூபாயைக் கொடுத்து அனுப்புகிறான். அந்த லாட்டரிச்சீட்டுக் கவரை எடுத்து தனியே பத்திரப்படுத்துகிறான்.

மறுநாள், அதிலுள்ள ஓர் லாட்டரி சீட்டுக்கு முதல் பரிசுத் தொகையாக ஒன்றரைக் கோடி ரூபாய் விழுகிறது. தன்னுடைய லாட்டரி ஏஜென்டிடம் தகவல்களை உறுதிப்படுத்திக்கொண்டு மாணிக்கம் அந்தப் பெரியவரைத் தேடிப் புறப்படுகிறான். அவரின் பெயர் தெரியாது, ஊர் தெரியாது, திசை தெரியாது. ஆனால் மருந்து மாத்திரைகளைப் போட்டு வைத்திருந்த அவருடைய மஞ்சள்பையில் ஓர் ஊரின் பெயர் அச்சிடப்பட்டிருந்ததை நினைவில் வைத்திருக்கும் மாணிக்கம் அந்த யூகத்தின் அடிப்படையில் அதற்கான பேருந்தில் கிளம்பிப்போனால் அவரைக் கண்டுபிடித்துவிடலாம் என்று நினைக்கிறான். பக்கத்துக் கடைக்காரரிடம் மட்டும், 'வயசான பெரியவர் ஒருவர் என்னைத்தேடி வந்தால் அவரை இங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு எனக்கு போன் பண்ணுங்கள்' என்றபடி அங்கிருந்து உடனடியாக நகர்ந்துவிடுகிறான். ஆனால் காரணத்தையோ விபரத்தையோ சொல்லவில்லை.




அப்போது, மனைவியிடமிருந்து வருகிற செல்போன் அழைப்பில், 'நம் கடையில் முதல்முறையாக பெரிய பரிசுத்தொகை ஒன்று லாட்டரி அடித்திருக்கிறது' என்பதைச் சொல்ல வேண்டியதாகி விடுகிறது. 'அதற்கான கமிஷன் தொகை எவ்வளவு வரும்?' என்று அவள் கேட்கிறாள். 'அது இன்னும் தெரியாது... ஆனால் லாட்டரி சீட்டை உரியவரிடம் கொண்டுபோய் சேர்ப்பதற்கு கிளம்பிக்கொண்டிருக்கிறேன்' என்றபடி நடந்த விஷயத்தை முழுமையாகச் சொல்லுகிறான். அவள் பதறிப்போய் அவனைத் தடுக்கப் பார்க்கிறாள். 'ஒருத்தர் பணம் கொடுத்து வாங்காத லாட்டரி சீட்டு எப்படி அவருக்கு சொந்தமாகும்? அது நமக்கானது. நம் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள என்னுடைய இத்தனை வருடக் கண்ணீருக்கு கடவுள் காட்டிய கருணை..' என்கிற ரீதியில் பேசுகிறாள். அவன் போன்-காலை கட் செய்துவிட்டு பேருந்தில் ஏறிவிடுகிறான்.

மனைவி, வெவ்வேறு வழிகளில் அவனை எப்படியாவது நெருங்கிவிடவும் வீட்டுக்குத் திரும்பி வரவைக்கவும் பலவழிகளில் முயற்சி செய்கிறாள். மாணிக்கம் கடுப்பில் செல்போனை அணைத்து வைத்துவிடுகிறான். பேருந்து அங்கிருந்து மலைக்கிராமத்தை நோக்கி கிளம்பிவிடுகிறது.

அந்த நிமிடத்திலிருந்து திரைக்கதையில் ஏற்படுகிற விறுவிறுப்பு படத்தின் இறுதி வரையில் எங்கேயும் வேகம் குறைய வில்லை. நடுவே ஒரு ஃபிளாஷ்பேக் பகுதியும் அதே விறுவிறுப்போடு எழுதப்பட்டு படம் பிடிக்கப்பட்டுள்ளது. அதுவே ஒட்டுமொத்த திரைக்கதைத் தருணங்களுக்குமான மையக் கதைச் சரடாகவும் அமைக்கப் பட்டிருக்கிறது.

மாணிக்கத்தை அவர்களால் தடுத்து நிறுத்த முடிந்ததா? அந்தப் பயணத்தில் மாணிக்கத்திற்கு ஏற்படும் தாமதங்கள், தடங்கல்கள் என்னென்ன? நடுநடுவே வீட்டிலிருந்து அவனுக்கு வரும் போன்-கால்களில் உறவினர்கள், வேண்டப்பட்டவர்கள் என பலதரப்பினரும் ஆளுக்கொரு நியாயத்தைக் கற்பிக்க முயலுகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருமே இந்தச் சமூகக் கட்டமைப்பின் வெவ்வேறு மனித பிம்பங்கள்தாம். அம்மனிதர்கள் முன்னெடுத்து வைக்கும் எதார்த்த நியதிகள் ஒவ்வொன்றுமே அததற்குரிய கோணங்களில் உள்ள காரணங்களையொட்டிய வாதங்களின் பொருட்டே மாணிக்கத்திடம் கேள்விகளாக எழுப்புகின்றன. அதற்கு அவன் இசைந்தானா?

அதன் தொடர்ச்சியில் கதைமாந்தர்களின் நடவடிக்கையினால் லாட்டரி விஷயம்

ஏற்கனவே சம்பந்தப்பட்ட போலீஸ்காரர் வரை போய்விடுகிறது. இப்போது கதைப்படி, ஓர் ஆளை போலீஸ் தேடுவதற்கான காரணமாக அங்கே மாறுவது பணமும் அதன் தற்கால மதிப்பும்தான் எனும்போது பிரச்சினைகளின் ஆணிவேரிலும் அதன் அர்த்தம் இடம் மாறுகிறது. அதனால் தேடலுக்கான நோக்கமும் இடம் மாறுகிறது. அந்த நோக்கத்தின் வீரியம் செயல்படுகிற காட்சிவேகம் திரைக்கதையை மேலும் துரிதப்படுத்துகிறது.

மாணிக்கம் தன்னுடைய மனசாட்சிக்கு உண்மையாக இருக்கப் போராடுகிறான். பொருள் சார்ந்த உலக நடைமுறை வாழ்வின் அங்கமான குடும்ப அமைப்புக்குள் உழலும் ஒரு மனிதன், தான் நேர்மையாக இருப்பதற்கு எத்தனை மெனக்கெட வேண்டியிருக்கிறது என்பதை நொந்துகொண்டே அவனுடைய பயணம் ஆங்காங்கே தடைப்பட்டபடி தொடர்கிறது. அவன் செல்போனை அணைத்து வைப்பதின் மூலம் தற்காலிகமாக தன்னிடமிருந்து.. தானே தப்பித்துக்கொள்ள முயற்சிக்கிறான். ஏற்கனவே மனைவியிடமிருந்து வந்துசேர்ந்திருக்கும் உணர்ச்சிகரமான வார்த்தைகள் மனத்தைக் குடைவதிலிருந்து சுயத்தை மீட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்கு பயணவழியில் சந்திக்க நேர்கின்ற, கடக்க நேர்கின்ற ஒவ்வொரு மனிதனும் ஏதேனும் ஒரு வடிவில் மனத்தளவில் அவனுக்கு உதவுகிறார்கள்.

முடிவெடுத்தல்தானே வாழ்க்கை. எந்த முடிவெடுத்தாலும் அதற்கான விளைவுகளும் உண்டு.

2021-இல் செப்டம்பர் மாதம் 17-ஆம் தேதி, நெட்ஃப்ளிக்ஸ் ஓ.டி.டி தளத்தில் அதன் சொந்தத் தயாரிப்பில் கொரிய மொழி வலைத்தொடரான ‘Squid Game’: Season-1. மொத்தம் ஒன்பது தொடர்பகுதிகளைக் கொண்டதாக (Episodes) 190-க்கும் அதிகமான நாடுகளில் வெளியாயிற்று.

2023-இல் அக்டோபர் மாதம் 18-ஆம் தேதி, அதே நெட்ஃப்ளிக்ஸ் ஓ.டி.டி தளத்தில் இந்தி மொழி வலைத்தொடரான ‘Kaala Paani’: Season-1 மொத்தம் ஏழு தொடர்பகுதிகளாக வெளியாகியது.

2024-இல் டிசம்பர் மாதம் 26-ஆம் தேதி, ‘Squid Game’: Season-2 மொத்தம் ஏழு தொடர்பகுதிகளைக் கொண்டு வெளியாகிறது.

இம்மூன்றிலும் உள்ள பொதுவிஷயம் என்னவென்றால் உயிர் பிழைத்திருப்பதற்கான அவசியத்தை, தேவையை, அர்த்தத்தைக் கட்டிக்காப்பதற்கான மனித எத்தனங்கள் விசித்திரமானவை என்பதைக் காட்டுவதுதான். அவற்றை காரணப்படுத்துகின்ற விதங்களை ஒவ்வொரு காலமும் ஒவ்வொரு வகைமைகளாக வரிந்துள்ளன. இவற்றைப் புரிந்து, படித்து, செயல்படுத்தி, அனுபவப்பட்டதிலிருந்து பிறருக்கு சொல்லிக்கொடுத்து அல்லது கற்பித்து என ஒரு வழிமுறையைப் பேண முயல்கிறோம். அதன் அடுக்கு/வரிசை சீர்குலையும்போதோ அல்லது நடைமுறைப்படுத்துவதில் சிக்கல்கள் ஏற்படும்போதோ புதிய முடிவுகளை எடுக்க வேண்டியிருக்கிறது. அந்த முடிவெடுத்தல்கள் சவாலாக இருக்கும்போது உருவெடுக்கும் மனப்போராட்டங்களே மிச்ச வாழ்வைத் தொடரவோ அல்லது அங்கேயே முடித்துக்கொள்ளவோ ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டியதாகிறது.

மேலே குறிப்பிட்ட இரண்டு வலைத்தொடர்களிலும் அந்தச் சவால்களைக் கையாண்டிருக்கிறார்கள். அவற்றில் உள்ள தொடர்பகுதிகள்

கதைக்களத்திற்கான.. தனி மனிதனின் அறத்தையும் தர்க்கத்தையும் நெறிமுறையையும் அசைத்துவிடும் பொதுச் சூழல்களை உருவாக்கியிருந்தன.

அதற்கு நிகரான ஒன்றை உலகம் அப்போது சந்தித்திருந்தது. அது COVID-19 நோய்த்தொற்றின் சர்வதேசப் பரவலும் அதன் விளைவுகளும் என்பதை அறிவோம். அதுவோர் உலகச் சூழ்நிலைமை. உயிருடமையான மனித மதிப்பை அந்நோய்த்தொற்று தலைகீழாக்கியது. உறவு நிலைகளையும் உணர்ச்சி நிலைகளையும் ஒன்றோடொன்று மோதவிட்டு அதுவரையிலான அதனதன் அர்த்தங்களைக் கேள்விக்குள்ளாக்கியது. இதனாலேயே உலகளவிலான கதையாடல் அம்சங்களில் 'Survival Drama' என்கிற வகைமை அதிகமாய் கவனப்படத் தொடங்கியது.

இப்படிப்பட்ட கதைக்களங்களுக்கு எப்போதுமே பார்வையாளர்களை வெகுவாக ஈர்க்கும் தன்மை உண்டு.

திரு.மாணிக்கம் திரைப்படத்திலும் அதே சூழலின் தன்மை வாய்த்திருக்கிறது. ஆனால் அது உயிர் சம்பந்தப்பட்டதாக அல்லாமல் தனிமனித நெறிமுறை மற்றும் சமூக மனித நெறிமுறை (Individual and Socio-ethics) சம்பந்தப்பட்டதாக இருக்கிறது. அப்பேற்பட்ட சூழ்நிலைமைகளில் முடிவெடுத்தல்களின் காரணங்களைப் பொறுத்தவரை, அது ஒருவன் தன் குடும்பத்தையும் தாண்டி சமூகத்தில் ஏற்படுத்திக்கொண்ட நற்பெயருக்காக இருக்கலாம். அல்லது மனசாட்சிக்கும் சொந்த வாழ்வின் பெருமதியாகக் கருதக்கூடிய தன் அனுபவத்தின் சாரமாய் நம்புகிற அறத்திற்காகவும் இருக்கலாம். அவற்றைப் பொதுமைப்படுத்த முடியாதபோது மனிதர்கள் கதாபாத்திரங்களாக பரிணமித்து விடுகிறார்கள். சமயங்களில் எழுதப்பட்ட



கதாபாத்திரங்களும் மனிதத்தன்மையோடு நிரூபணம் அடைந்துவிடுகிறது.

சில திரைப்படங்களை திரையரங்குகளில் மக்களோடு மக்களாக உட்கார்ந்து பார்வையிடும்போது மனத்தில் எழும் உணர்வுக் கணங்கள் முற்றிலும் வேறாக இருக்கும். கூட்டு சமூக மனமாக அந்த இருளில் ஒரு கூரைக்குக் கீழே பிறரோடு ஒருங்கிணைந்திருக்கிற உணர்வுநிலை நிச்சயமாக அதில் உண்டு. நம்மை 'தனி' என்று நினைத்துக்கொள்ள முடியாத விதத்தில் ஓர் உளவியல் அங்கே வேலை செய்கிறது. அது, கண்முன்னே திரைக்கதையாக அமைக்கப்பட்டிருக்கும் கதைக்களத்தைப் பொருத்ததுமாகும்.

கதாபாத்திரங்களை ஏற்று அதற்கு தகுந்த உடல்மொழிகளை முகபாவங்களை வெளிப்படுத்துகிற நடிகர்களின் பங்கு இப்படிப்பட்ட கதைகளுக்கு மிக முக்கியமானதாகும். இதில் நடிகர் சமுத்திரகனிக்கு ஏற்கனவே பார்வையாளர்கள் மத்தியில் இருக்கும் சாமானிய மனிதனின் சமூகப் பிம்பமானது 'மாணிக்கம்' கதாபாத்திரத்திற்கு ஓர் உயிர்ப்பைத் தருகிறது. காட்சிகளின் கனமான தருணங்களின் மதிப்புகளை அவர் தன்னுடைய கண்களில்



வெளிப்படுத்தும் விதத்திலேயே அதிலுள்ள நுணுக்கமான மனவோட்டத்தை நம்மிடம் கடத்திவிடுகிறார். மொத்த கதையையும் தன் தோளில் தூக்கிச் சுமந்திருக்கும் அவருடைய நடிப்பு ஒரு நடுத்தர வர்க்க மனிதனை அப்படியே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தி விடுகிறது.

மற்ற துணைக் கதாபாத்திரங்களில் வரும் பெரும்பாலானோர் தமிழ் சினிமா பார்வையாளர்களுக்கு நன்கு அறிந்த திரைமுகங்களாக இருக்கிறார்கள். தொழில்முறை நடிகர்களுக்கேற்ற கதாபாத்திரங்களோடு சேர்த்து.. ஒளிப்பதிவும் படத்தொகுப்பும் இசையும் திரைக்கதையின் விறுவிறுப்பிற்கு துணை புரிந்திருக்கின்றன.

ஒரு சாமானியனான மாணிக்கத்தை, திரு.மாணிக்கமாக (Mr. Manickam) அடுத்துள்ள இளைய தலைமுறை விளிக்கும்போது.. அவன் வந்தடைந்திருக்கின்ற ஒரு புதிய சமூக மதிப்பீடாக அந்தத் 'திரு' இருக்கிறது. ஆனால் அது அவனுக்குத் தெரியாது.

திக்குவாய் மகளை மாணிக்கத்திடம் செல்போனில் பேச நிர்ப்பந்திக்கின்ற குடும்ப உறவினர்களின் செயலில், அவர்களே அறியாமல் ஒரு குடும்ப வன்முறையை (Domestic Violence) நிகழ்த்துகிறார்கள். அதனைப் பார்வையாளர்களாக இருக்கும் பொது சமூகம் உணர்ந்தாக வேண்டும். குடும்பத்திற்குள் யாராக இருந்தாலும் அவர்களை உடல்ரீதியாக அடித்துக் காயப்படுத்துவது மட்டுமல்ல.. மனரீதியாகக் காயப்படுத்துவதும் கூட குடும்ப வன்முறை செயல்தான். அதிலும் குழந்தைகளை உட்படுத்துவது மிகவும் ஆபத்தான உளவியல் விளைவுகளை ஏற்படுத்தும்.

மாணிக்கம் அடுத்தத் தலைமுறை மீது வைத்திருக்கும் அழுத்தமான நம்பிக்கைதான் அவன் தன்னுடைய பால்யத்திலிருந்து உறுதியுடன் கிளம்பி வந்த இடம் என்பதை மகளுடனான சிறிய உரையாடலில் வெளிப்படுத்தி விடுகிறான். அதனைத் தொடர்ந்து உருவாகும் திரைக்காட்சிகளில் அவனோடு சம்பந்தப்பட்டவர்களுக்கு உணர்ச்சி ரீதியாகவே.. உரையாடல்கள் அவசியப்படாத முகபாவங்களை மனித அகம் பூண்டுவிடும்போது மாணிக்கத்தின் கதாநாயக பிம்பம் மேலும் ஓரடி உயர்ந்து விடுகிறது.

'ரொம்ப இயல்பா இருக்கற விஷயங்களை எல்லாம் கொண்டாடுற நிலைமைக்கு நாம வந்துட்டோமில்ல?' என அவன் நம்மைப் பார்த்துக் கேட்கும் கேள்வியின் தொனியில் சலிப்பில்லை, ஆச்சரியமில்லை, திகைப்பில்லை.

மிகச் சாதாரணமாகத்தான் கேட்கிறான். ஆனால் அது நம்மைக் கூர்மையாகத் தைக்கிறது.

elangomib@gmail.com ■



சிறுகதை
வாசுதேவன் அருணாசலம்

# நான் பேச நினைப்பதெல்லாம்!

“கோடைப் பண்பலை நூறுப் புள்ளி ஐந்தின் இசைத்தென்றலில் பி. சுசிலாவும் டி.எம். சௌந்தரராஜனும் சுகமான கானங்களைத் தந்து வருகிறார்கள்... *‘கணவன் ஒரு வரம்தான்! கணவன் ஒரு வரம்தான்! மனைவியின் மனதை அவன் அறிந்திருந்தால்...! மனைவி ஒரு வரம்தான்! மனைவி ஒரு வரம்தான்! கணவனின் எண்ணங்களை அவள் அறிந்திருந்தால் அவனுலகில் இவள் இருப்பாள்! இவளுலகில் அவன் இருப்பான். அவள் தாயாக! இவன் சேயாக! பாவையின் முகமே பசியாற்றுமே! வாழ்வுதான் எவ்வளவு இனித்துக் கிடக்கும்!*

*[(இசைக்குப்பின்) நான் பேச நினைப்பதெல்லாம், நீ பேச வேண்டும். நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும். உறவாட வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம் (மீண்டும் இசை மட்டும்) நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும். நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும். உறவாட வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம்]*

“ஏன்டா எடுவட்ட பயலே... குடிச்சிப்புட்டு வந்து கன்னாபின்னானு பேசுறியே... கை நீட்டுறியே.... நீ வெளங்குவியாடா! தொட்டுத் தாலி கட்டுன பொண்டாட்டிய கை நீட்டுறியே... நீயெல்லாம் ஆம்பளையாடா! ஒன்னையெல்லாம் ஒன்னும் சொல்லக் கூடாதுடா! ஒங்காத்தா, எங்காத்தாள ஏமாத்தி என்ன உனக்கு கட்டிவச்சாளே, அவளச் சொல்லணும்டா! ஒங்க ஒட்டும் வேணாம், ஒறவும் வேணாம்னு தான்டா ஒதுங்கியிருந்தோம். இருவத்திநாலு மணிநேரமும் குடிச்சிக்கிட்டே இருக்கியே, ஒனக்கெல்லாம் பொண்டாட்டி ஒரு கேடாடா? பொண்டாட்டியோட அருமை ஒனக்கெல்லாம் எங்கடாத் தெரியப் போகுது!”

*[நான் காணும் உலங்கங்கள், நீ காண வேண்டும். நீ காண வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம்... நீ காணும் பொருள் யாவும், நானாக வேண்டும். நானாக வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம்]*

“இந்தா பாருடி! என்னையப் பேசு! எது வேணும்னாலும் பேசு! ஏத்துக்கிறேன்... எங்காத்தாளப் பத்திப் பேசுன! ஒன்னக் கொண்டே போடுவேன். சொல்லிப்புட்டேன்.

அவமேல எனக்கும் கோவமிருக்கு! ஓங்கிட்ட நல்லா சிக்கவச்சிட்டுப் போயிட்டா! வெளங்காதவ! எங்கக்கா மவள கட்டியிருந்தேன்னா, இன்னிக்கு அய்யா நெலமையே வேற. தெரிஞ்சுக்கோ! ஒதுங்கியிருந்தாளாம் ஒதுங்கி! ஓங்காத்தா பாவ்லா பண்ணி எங்காத்தாள ஏமாத்தி ஒன்னைய என் தலயில கட்டி வைச்சுப்புட்டாளே! என்னத்த கொண்டுவந்து குமிச்சுப்புட்ட? அஞ்சு பைசாவுக்கு வக்கில்லாம வந்துபுட்டு... பேசுறா பேச்சு! ஒன்னையெல்லாம் செல்லு செல்லாச் செதுக்காம விட்டுவைச்சிருக்கேன்ல... என்னைய சொல்லணும்டி!"

[(ஆண் பெண் குரல்கள் இரண்டும் இணைந்து ஒன்றாகப் பாடுகின்றன.) நான் பேச நினைப்பதெல்லாம், நீ பேச வேண்டும். நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும், உறவாட வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம்]

"போடாப்போடா, வெக்கங்கெட்ட நாயே! ஓங்கக்கா மவள கட்டியிருந்தா இந்நேரம் நீ மண்ணுக்குள்ள போயிருப்படா! மண்ணுக்குள்ள போயிருப்ப! இளிச்சவாச்சி நாங்க போயி... இன்னும் உயிரோட இருக்கடா! குடிகாரப்பயலே! வேளாவேளைக்கு ஒழுங்கா கஞ்சி கூட ஊத்த முடியாத வக்கத்த பயடா நீ! என்னைய எளக்காரமா பேசுவியா! அங்கிட்டு இங்கிட்டுனு போயி, பத்துபாத்திரம் தேச்சு, தொவச்சு போட்டு, வீட்டு வேலைகள செஞ்சு, பொழைக்க விட்டுப்புட்டு, பேசுறான், வெண்ண வெட்டி! தன்னால ஒழைச்சுக் கொட்டித் தேஞ்சு போயிட்டாரு தொரை! இவர நான் ஏமாத்திபுட்டனாம்! போடாப்போடாக் குடிகாரப் பொறிக்கிப்பயலே!"

[பாலோடு பழம் யாவும் உனக்காக வேண்டும், உனக்காக வேண்டும்... பாவை உன் முகம் பார்த்துப் பசியாற வேண்டும், பசியாற வேண்டும்]

"ஓங்முந்தானியவே பிடிச்சிக்கிட்டு அலையிறதுக்கு நான் ஒண்ணும் பொண்டுகப் பய இல்லடி! ஆம்பளடி! ஆம்பள சிங்கம்டி! எவன்டி குடிக்காம இருக்கான்? எவேன் இருக்கான்? ஊரே குடிச்சிக்கிட்டுத்தான்டி இருக்கு! புத்தி சொல்ல வந்துட்டா! புத்தி! பொசகெட்டவ! இவ கொண்டு வந்ததத்தான் வச்சு குடிச்சு காலிபண்ணிப் போட்டுட்டோம்... பேசுறா... பேச்சு... போடிப்போடி... பொறம்போக்கு! ஒத்த பைசாவுக்கு வக்கில்லாதவ குடும்பத்துல கண்ணாலம் கட்டி, வீணாப் போனது தான்டி மிச்சம். எல்லாம் எங்காத்தா பண்ணுன வேல! செவனேனு சுத்திக்கிட்டிருந்தவன பிடிச்சு அது கெடைக்கும், இது கெடைக்கும்னு சொல்லி ஏமாத்தி ஒன்ன ஏன் தலையில கட்டிவச்சதுதான் மிச்சம்!"

[மனதாலும் நினைவாலும் தாயாக வேண்டும், நானாக வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... மடி மீது விளையாடும் சேயாக வேண்டும், நீயாக வேண்டும்]

"இந்தா பாரு... ஏமாந்தது நாங்க, ஏன் குடும்பம், எங்காத்தா, தெரிஞ்சுக்கோ! ஆமாடா... ஊரே குடிக்குதுனு, நீ மட்டுமா குடிக்கிற? நீ ஒன்ன பெத்துப் போட்டுருக்கேல்லே! அதுவும் அடங்காம ஒன்ன மாதிரிதான் குடிச்சிப்புட்டு சுத்திக்கிட்டுத் திரியுது. என்ன... ஒன்ன மாதிரி அது சலம்புறதில்ல... வேணாலும் பாரு! ஒருத்திய இழுத்துக்கிட்டு வந்து நிக்கப்போறான், அன்னைக்கு நீ குய்யோ மொறையோனுனு கத்தப்போற!... நான் ஒரு கிறுக்கச்சி... உன்னைய பத்தித் தெரிஞ்சும் இதச் சொல்றேன் பாரு!... எவேன் செத்தா என்ன? எவேன் பொளச்சா என்ன? எவேன் எக்கேடு கெட்டுப்போனா என்னானு போற பய! நீயாவது இதப்பத்தி நெனைக்கிறதாவது? உனக்குக் குடிக்கணும்! குடிச்சிக்கிட்டே ஊர் மேயனும், அவ்வளவுதான்."

[நான் பேச நினைப்பதெல்லாம், நீ பேச வேண்டும்... நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும்... உறவாட வேண்டும்]

“ஏன்டி ... நீ எங்க சுத்தி எங்க வர்றேன்னு எனக்குத் தெரியும்டி! ஒங்கண்ணன் மவள அவனுக்கு முடிச்சிடலாம்னு பாக்கறே! நடக்காதுடி, நடக்காது! நடக்க விடமாட்டேன்டி! அந்த பீத்தரப் பய மவ இங்க வரக்கூடாது. எவள வேணும்னாலும் சரி ஒன்புள்ள இழுத்துட்டு வரட்டும்... பிரச்சினையில்ல... ஒங்கண்ண மவ இங்க வந்தா... மொத வெட்டு ஒனக்குத்தான்டி! ரெண்டாவது ஒங்கொண்ணனுக்கு! அந்தப் பயலால தான்டி இன்னைக்கு நா நடுரோட்டுல நிக்கிறேன். ‘இந்தா’ தரேன்னு இருபதாயிரம் வாங்கி இன்னிக்கு வரைக்கும் கொடுக்கல. அந்த பணத்த வைச்சுத்தான் ஒரு கடைய கிடைய வைக்கலாம்னு இருந்தேன்... கெடுத்துப்புட்டான். விளங்காதவன். அஞ்சு காசு கையில இருந்தா பெரிய கொம்பனா? அவேன் வீட்டுள்ள பொண் எடுத்திடுவேனா? நான் என்ன அவ்வளவு மழுமட்டையா?”

[சொல்லென்றும் மொழியென்றும், பொருளென்றும் இல்லை, பொருளென்றும் இல்லை... சொல்லாத சொல்லுக்கு, விலையேதும் இல்லை, விலையேதும் இல்லை...]

“இல்லாட்டியும்... மகாராசா! கடைய வைச்சு கோடி கோடியா சம்பாதிச்சு பொண்டாட்டிய மகாராணி மாதிரி வைச்சிருந்து ஊர் மெச்ச வாழ்ந்திருப்பாரு! எங்கண்ணேதான் கெடுத்துப்புட்டான்... போடாப்... பீத்தரப்பயல! என்னா சொன்ன? எங்கண்ணே மவ இங்க வரக்கூடாதா? இந்தா பாரு எதையாவது கன்னாபின்னானு பேசிக்கிட்டிருக்காத! ஒன்மவனுக்குத்தான் அவேன் மவள கட்டித்தர காத்துகிட்டிருக்கான் போல பேசுற... ஒன்னையும் ஒன் மவனையும் சீண்ட மாட்டான் எங்கண்ணே! இந்தக் குடும்பத்துல இன்னோரு பொண்ணக் குடுத்து அவ வாழ்க்கைய சீரளிக்க நா விடமாட்டேன்! ஒன் மவனுக்கு என்ன யோக்கித இருக்குனு, எங்கண்ணே பொண்ணு தருவான்? குடிச்சிப்புட்டு சுத்துற நாய்களுக்கு குடும்பம் ஒரு கேடா? மூணு நாளைக்கு முன்னாடி போனவேன்... இன்னைக்கு வரைக்கும் வரல. எங்க போய் தொலஞ்சான்னு தெரியல! இவனுக்கு... கால் கட்ட போட்டு இன்னொருத்திய இந்தக் குடும்பத்துக்கு கொண்டுவந்து அவ வாழ்க்கைய நாசம் பண்ண எனக்கு இஷ்டமில்ல. நா பட்டதெல்லாம் போதும். எல்லாக் கருமாந்தரமும் என்னோடவே போகட்டும்.”

[ஒன்றோடு ஒன்றாக உயிர் சேர்ந்த பின்னே... உயிர் சேர்ந்த பின்னே...

உலகங்கள் நமையன்றி வேறேதும் இல்லை வேறேதும் இல்லை...]

“இந்தா வந்துடான்டி ஒன் மவன்... எங்கடா போயிருந்த? ஒங்காத்தாட்ட ஒண்ணும் சொல்லயா? கிடந்து கத்துறா! எங்க வெளியூர்ல வேலையா? ஆட்டோல வந்து இறங்கின மாதிரியிருந்தது... ஏன்டா? ஏதும் ஒடம்புக்கு முடியலையா? வெளிய யாரோ இருக்கிற மாதிரியிருக்கு? யாருடா? பொறு! நானே போயிப் பாக்கிறேன்! அடியாத்தி! மோசம் போனேனே! அடியே... எளவெடுத்தவளே! இங்க வந்து பாருடி! ஒன் மவேன், என்ன பண்ணியிருக்கானு! ஒங்கண்ணே மவள இழுத்துக்கிட்டு வந்திருக்காண்டி! இந்நேரம் ஒங்கண்ணே போலீசு டேசனுக்குப் போயிருப்பான்டி! என்னைய தூக்கி உள்ள வச்சு வெளுக்கப் போறானுங்கடி! வெளுக்கப் போறானுங்க! போச்சுடி! ஏன் மானம் மருவாத... எல்லாம் போச்சுடி! வந்துபாருடி... ஒ ஒருத்தியவே என்னால சமாளிக்க முடியல... ஒங்குடும்பத்திலயிருந்து இன்னோருத்தியா! செத்தேன்டி! செத்தேன்!”

[(ஆண் பெண் குரல்கள் இரண்டும் இணைந்து ஒன்றாகப் பாடுகின்றன) நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும்... நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும்... உறவாட வேண்டும். ம்... ம்... ம்... ம்... ம்... ம் (இசை மெல்ல மெல்ல மங்கி மறைகிறது.)

"ஒலித்த பாடல் "பாலும் பழமும்" திரைப்படத்திற்காக! கோடைப் பண்பலை நூறுப்புள்ளி ஐந்தின் இசைத்தென்றல்... எந்த மாளிகையும் திறந்துகொள்ளும்! எந்த மாளிகையும் திறந்துகொள்ளும்! பெண் என்றால்! ஆம் பெண் என்றால்! தெய்வ மாளிகை என்ன விதிவிலக்கா! அவள் நினைத்துவிட்டால் போதும். வெற்றிதான்! ஆம், வெற்றிதான்."

[(இசைக்குப் பின்) தேடினேன் வந்தது... நாடினேன் தந்தது... வாசலில் நின்றது... வாழவா என்றது]

vasuaruntamil@gmail.com ■





கவிதை

**A. S. சுந்தரராஜன்**

# மரணிக்கின்ற

தொடர் முயற்சியில்
பிரயத்தனப்பட்ட
முயற்சிகள்

வாய்ப்பே கொடுக்கப்படாத
வைக்கப்பட்ட குற்றச்சாட்டில்
மனதுக்குள்ளேயே
பதிலுரைகள்

உண்மையும்
தகுதியும் இல்லாத
தற்பெருமையில்
உதடு வரை வந்து
விட்ட எதிர்ப்புரைகள்

அருகில் இல்லாதவர் பற்றியும்
நாம் அறியாதவர் பற்றியும்
வீசப்படும் விமர்சனத்தில்
வேண்டாமே என
மனதின் குரல்

ஏற்க முடியாத
கருத்துக்கும்
பேச்சுக்கும்
தன்னை விட வலியவர்
என்பதால்
உள்ளுக்குள்ளேயே
சொல்லிக்கொண்ட
எதிர்வாதங்கள்

a.s.sundararajan@globaltvs.com ■



கட்டுரை
கே.எஸ். சுதாகர்

# கனவு காணும் உலகம்

பன்நெடுங்காலமாக இலங்கையில் வாழ்ந்துவரும் எமது மக்கள்- மூதாதையர்கள்-ஆவணங்களைப் பாதுகாத்து வைப்பதிலும் பதிவு செய்வதிலும் தவறிவிட்டார்கள். யாழ் நூலகம் எரிந்துபோனதும், போர் காரணமாக பல ஆவணங்கள் அழிந்துபோனமையும் துர்ப்பாக்கியமாகும்.

அவுஸ்திரேலியாக் கண்டம் 200 வருடங்கள் பழமை வாய்ந்தது. ஆனால் அதற்கு முன்னரே அங்கு ஆதிவாசிகள் வசித்து வருகின்றார்கள். அவர்களுக்கு பல இன்னல்கள் நேர்ந்த போதிலும், ஓரளவிற்கு அவர்கள் தமது ஆவணங்களை பாதுகாத்து வைத்திருக்கின்றார்கள் என்றே சொல்ல வேண்டும். சமீபத்தில்கூட அவர்களிடமிருந்து பறிக்கப்பட்ட நிலப்பரப்புகளில் சிலவற்றை அவுஸ்திரேலிய அரசு மேற்கு அவுஸ்திரேலியாவில் மீளக் குடுத்திருக்கின்றது. அவுஸ்திரேலிய முன்னைநாள் பிரதமர் ஹெவின் ரட் 2008 ஆம் ஆண்டு, ஆதிக்குடிகளுக்கு இழைக்கப்பட்ட இன்னல்களை ஒரு மனித உரிமை மீறல் என அறிவித்து அவர்களிடம் மன்னிப்புக் கோரியிருந்தார்.

இந்தக் கட்டுரை மெல்பேர்ணில், டண்டினோங் மலைச்சாரலில் இருக்கும் ஆதிவாசிகள் பற்றிய சிற்பங்கள் ஓவியங்களைப் பற்றிச் சொல்கின்றது. ஆனால் இந்தப் படைப்புகளுக்குச் சொந்தக்காரர் ஆதிவாசி அல்ல. வில்லியம் பில் றிக்கெற்ஸ் (William Bill Ricketts) எனப்படும் வெள்ளையினத்தவர் ஆவார்.



## வில்லியம் பில் றிக்கெற்ஸ்...

மெல்பேர்ணில் சனத்தொகைப் பெருக்கம் மிகவும் குறைவாக இருந்த காலப்பகுதியில், தங்க வேட்டை காரணமாக பலர் புலம்பெயர்ந்து வரத்தொடங்கியிருந்தார்கள்.

இவரது தாத்தா வில்லியம் றிக்கெற்ஸ் 1857 ஆம் ஆண்டளவில் தனது மனைவி மேரி ஆன் சகிதம் பிரித்தானியாவில் இருந்து மூன்று நான்கு மாத கடல் பிரயாணத்தின் பின்னர் மெல்பேர்ண் வந்து சேர்ந்தார். இவர்களுக்கு 12 பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில்

அல்பிரட் என்பவர் சுசான் என்னும் பெண்மணியைத் திருமணம் செய்தார். இவர்களுக்கு 5 பிள்ளைகள் பிறந்தார்கள். கடைசிப் பிள்ளையாக பில் 1898 ஆம் ஆண்டு பிறந்தார். இவர்கள் றிச்மண்ட் என்னும் பகுதியில் குடியிருந்தார்கள்.

பில் தனது ஆரம்பக் கல்வியில் பெரிதும் நாட்டம் கொள்ளவில்லை. பாடசாலையை விடுவது என்று தீர்மானித்ததும் தமது உறவினரின் நகை செய்யும் தொழிற்சாலை ஒன்றில் பயிலுனராகச் சேர்ந்தார். அப்போது அவருக்கு வயது பதினான்கு. இசையில் ஆர்வம் கொண்ட இவர் வயலின் வாசிப்பதில் கெட்டிக்காரர்.

வில்லியம் பில் றிக்கெற்ஸ், 1935ஆம் ஆண்டளவில் மவுன்ற் டண்டினோங் பகுதியில் நாலரை ஏக்கர் நிலப்பரப்பை வாங்கினார். அது முதற்கொண்டு அங்கேயே வசிக்கலானார். இயற்கை எழில் கொஞ்சும் சரிவுப்பாங்கான அந்தப்பகுதியின் பாதை மருங்கிலும் குகைகளிலும் களிமண்ணினால் ஆன உருவங்களைச் செய்து வைத்தார்.

ஆதிவாசிகளின் நம்பிக்கை வாழ்க்கை முறைகளினால் ஈர்க்கப்பட்ட மிகச்சில வெள்ளை இனத்தவர்களில் இவரும் ஒருவர். விலங்கு தாவரம் மனிதன் இயற்கை - இந்தப்பின்னணியில் இவரது படைப்புகளின் தொனி அமைந்திருக்கும். இவரது கற்பனையில் உருவாகும் படைப்புகளிற்கு பூர்வீகக் குடிகளின் சின்னங்களை குறியீடாகப் பாவித்துள்ளார். இவரது காப்பகத்தின் முக்கியமான படைப்புகள் ஆதிவாசிகளின் உருவங்களாகும். அவை ஆதிவாசிகளினதும், அவர்களுக்கும் பூமிக்குமிடையேயான பரிசுத்தமான தொடர்புகள் பற்றியனவுமாகும்.

காடு இவருடைய விருப்பத்திற்குரியது. அதுபோல பச்சை இவருக்குப் பிடித்த நிறம். இவருடைய பெரும்பாலான ஆடைகள் பச்சை நிறத்தையே



கொண்டிருந்தன. அதே போல இவரது படுக்கை, ஜன்னல் விரிப்புகள் எல்லாமே பச்சை நிறத்தைக் கொண்டிருந்தன.

உயிரினங்கள்மீது இவர் வைத்திருக்கும் மதிப்பு அளப்பரியது.

இவர் வசித்த பகுதிகளில் நுளம்பு, எலி தொல்லைகள் அதிகம். இவர் நுளம்புகளை விரட்டுவதற்கு ஒருபோதும் நுளம்புத்திரி பாவித்தது கிடையாது. அவற்றைக் கொல்லக்கூடாது என்பதில் கவனமெடுப்பார். எலிகளைப் பிடித்து வேறு காட்டுப் பகுதிகளில் கொண்டுபோய் விட்டுவிடுவார்.

இவர் 60 வருடங்களுக்கும் மேலாக தனது படைப்புருவாக்கங்களைச் செய்துவந்த போதிலும், தன்னை ஓர் ஓவியனாகவோ சிற்பியாகவோ முத்திரை குத்துவதை விரும்பவில்லை. இவர் தனது படைப்புகள் தன்னூடாக வருகின்றனவேயொழிய தன்னுடயவை அல்ல என்கின்றார்.

இவர் திருமணம் செய்துகொள்ளவில்லை.

இவரது படைப்புகளில் 'Dromana'-

*Seawinds Garden, Arthurs Seat, Victoria* - மற்றும் *"GunBrute'-William Ricketts Sanctuary, Mount Dandenong, Victoria* குறிப்பிடத் தகுந்தவை ஆகும்.

1949–1960 இடைப்பட்ட காலப்பகுதியில் அடிக்கடி மத்திய அவுஸ்திரேலியாவிற்கு பயணம் மேற்கொண்டு, அங்கு வாழும் *Pitjantijatjara, Arrente* ஆதி இனமக்களுடன் வாழ்ந்தார். அவர்களின் பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறைகளினால் பெரிதும் கவரப்பட்டார். தன்னை அந்த இன மக்களுக்காக தத்துக் கொடுத்தார். இவரது பெரும்பாலான படைப்புகள் மத்திய அவுஸ்திரேலியா பகுதியில் உள்ள *Alice Springs* பகுதியில் உள்ள *pitchi Ritchi* பூங்காவில் உள்ளன.

1960களில் அவர் அங்கு இல்லாத காலப்பகுதியில் அவரது படைப்புகள் அழிக்கப்பட்டும் களவாளப்பட்டும் போயின. இதனால் அவற்றை அரசு பொறுப்பேற்று, பாதுகாப்பு கருதி மேலும் நிலப்பகுதியை வழங்கியது. தற்போது மொத்தம் 14 ஏக்கர் நிலப்பரப்பில் இந்தக் காப்பகம் இருக்கின்றது, வருடந்தோறும் பல்லாயிரக்கணக்கான பார்வையாளர்கள் வந்துபோகும் இடமாக உள்ளது. காட்டிற்குள் அமைந்திருந்த சரணாலயத்தில், விக்டோரியா அரசினால் இவருக்கென கட்டிக்கொடுக்கப்பட ஓர் அறை கொண்ட வீட்டில் 1962 முதல் பில் வசிக்கலானார். இவரின் அந்த அறை





145 Bill at the Taj Mahal [c. October, 1970] and, right, the photo for his new passport[c. April, 1971]. For a riod of just over six months, his appearance had changed dramatically. Photographers unknown.

அவரின் படுக்கை, குசினி, ஸ்ரூடியோ, விருந்தினர் அறை எனப் பல வடிவங்கள் எடுத்தன.

1970 ஆண்டு காலப்பகுதியில் புதுச்சேரி (இந்தியா) சென்று, ஸ்ரீ அரவிந்தர் ஆசிரமத்தில் இரண்டு வருடங்கள் தங்கியிருந்தார்.

இவரை நான் பார்ப்பதற்கு கொடுத்து வைக்கவில்லை. அவுஸ்திரேலியாவிற்கு நான் வருவதற்கு முன்பதாக 1993 இல் அவர் இறந்துபோனார். இறக்கும் வரை மவுன்ற் டண்டினோங் சரணாலயத்தில் ஆதிவாசிகள் பற்றிய செயற்திட்டங்களை முன்னெடுத்தார்.

*References*

*Whitefella Dreaming, The authorized biography of WILLIAM RICKETTS, by Peter Brady,* 1994.

kssutha@hotmail.com ■



கட்டுரை

ஸ்ரீவில்லிபுத்தூர் எஸ். ரமேஷ்

# இனிப்பு அவஸ்தைகள்

இந்தக் கட்டுரையை வாசிக்கும் நீங்களும், உங்களைப் போன்ற பிறரும், சிறு வயதில் இதே கட்டுரையில் சொல்லப்படும் அனுபவங்களைப் பெற்றிருப்பீர்கள் என்று நம்புகிறேன். ஒருவரும் அறியாத ஏதோ ஒரு விஷயத்தை அடியேன் சொல்லப் போவதில்லை .

ஒரு குழந்தை பிறந்ததும், அதைத் தங்கள் மடியில் போட்டுக்கொண்டு, அதன் பெற்றோர் அதன் வாயில் சேனத்தண்ணி தொட்டு வைப்பதுண்டு. சேனத்தண்ணி என்பது வேறு ஒன்றுமல்ல. சுத்தமான நீரில் சர்க்கரையைக் கரைத்தால் அதுதான் சேனத்தண்ணி ஆகும். ஒரு குழந்தையை இனிப்பு சாப்பிடப் பழக்குவது என்பது சிறு வயதிலிருந்தே தொடங்கி விடுகிறது.

குழந்தைக்குப் பெயரிடும் நிகழ்ச்சி நடக்கும்போதும், அந்தக் குழந்தையை மடியில் இட்டு, அதன் வாயில் சர்க்கரையை இடுவது வழக்கம். இந்த உலகத்திற்கு ஒரு புதிய பிரஜை வந்துசேர்ந்திருப்பதை கொண்டாடுவதற்காக அப்படிச் செய்கிறார்களோ? ஒரு சிறிய கிண்ணத்தில், சோற்றை வைத்து, அதில், கொஞ்சம் நெய்யிட்டு, அதனுடன் சர்க்கரை சேர்த்து, அதை அந்தக் குழந்தைக்கு ஊட்டி விடுவது வழக்கம். வெவ்வேறு இனக்குழுக்களில் இது வேறு வேறு விதமாக அமையும்.

என் பள்ளிப் பருவத்தில், துவக்கக் கல்வி பெற்ற காலங்களில், என் வீட்டிலிருந்து இருநூறு மீட்டர் தொலைவில் என் பள்ளிக்கூடம் அமைந்திருந்தது. காலையில் பள்ளிக்குப் புறப்படும்போது, என் அம்மா பத்து பைசா தருவார். பள்ளி முடிந்து வீடு திரும்பும்போது, பள்ளி வாசலில் ஜவ்வு மிட்டாய் விற்பவரிடம் அதைக் கொடுப்பேன். அவர் சதுரமான தகரத்தட்டில் விரித்து வைக்கப்பட்டிருக்கும் சர்க்கரைப்பாகின் ஒரு முனையில் தனது அழுக்குக் கையைப் போட்டு, ஓர் இழுவை இழுப்பார். பொரி கடலை தூவி வைக்கப்பட்டிருக்கும் அந்த இழுவை, நீண்டுகொண்டே போகும். அதை உருட்டி என் கையில் கொடுப்பார். அதை வாங்கிக்கொண்டு என் வாயில் போட்டால், அது அத்துணை சுவையாக இருக்கும்! வீடு திரும்பும் வழியில் அதை என் வாயில் சவைத்துக்கொண்டே போவேன். தின்னப்படாத மீதி இருந்தால், அதை எடுத்து என் சட்டைப்பையில் போட்டுக்கொள்வேன். அந்த சவ்வு மிட்டாய் அப்படியே வெள்ளைக்

கதர் சட்டையோடு ஒட்டிக்கொள்ளும். என் அம்மா துணிகளைத் துவைக்கும் போது, அந்த பழுப்பு நிற ஜவ்வு மிட்டாய்க் கறை மாத்திரம் போகவே போகாது. சட்டையில் ஒட்டிக்கொண்ட அந்த இனிப்பான பழுப்புநிறக் கறை என் மனதிலும் அப்படியே நிரந்தரமாக ஒட்டிக்கொண்டு விட்டது.

என் அப்பா நீதிமன்றத்தில் தலைமை எழுத்தராக இருந்த காரணத்தாலும், அவர் ஒருவரது சம்பாத்தியத்தில் மட்டுமே குடும்ப இயந்திரம் ஓடிக்கொண்டிருந்ததாலும், நடுத்தரக் குடும்பங்களில் நிலவும் அதே பொருள் நெருக்கடி எங்கள் குடும்பத்திலும் நிலவியதால், நான் நினைத்ததை வாங்கிச் சாப்பிட முடியாத நிலையில் இருந்தேன்.

சில ஞாயிறு மாலை வேளைகளில், என் அம்மா அரிசியைக் கொடுத்து, வீட்டுக்கு அருகே இருந்த ஒரு மாவு அரவை மில்லில் அரைத்துக்கொண்டு வரச்சொல்லுவார். நானும் அரைத்துக்கொண்டு வருவேன். என் அம்மா அதை வைத்து கொழுக்கட்டை செய்வார். அம்மாவின் கைப்பக்குவமே அலாதியானது. நாங்கள் நினைத்ததை வாங்கிச் சாப்பிட முடியாத அளவுக்கு வீட்டில் எப்போதும் பணமுடை இருக்கும். மாலை வேளைகளில், பள்ளி முடித்துவிட்டு வந்ததும், பசியோடு நானும் என் சகோதரர்களும் ஏதாவது சாப்பிடக் கிடைக்காதா என்ற ஏக்கத்தோடு அம்மாவைப் பார்ப்போம். பல நாட்களில் ஒன்றுமே இருக்காது. தட்டில் வெறும் மோர் சாதத்தைப் போடுவார். சில நாட்களில் பக்கத்து வீடுகளில், ஏதாவது விசேஷம் நடந்திருக்கும். அவர்கள் தயார் செய்த பட்சணங்களைக் கொண்டுவந்து தருவார்கள். அதை அம்மா தான் சாப்பிடாமல் பத்திரமாக வைத்திருந்து நாங்கள் பள்ளியிலிருந்து வந்ததும், அதை எடுத்து எங்கள் முன்னே நீட்டுவார். "நீ சாப்பிட்டாயா?" என்று நாங்கள் ஒருநாளும் அவரிடம் கேட்டதில்லை.

யாராவது ஒரு பாத்திரத்தில் கொண்டுவந்து தந்திருக்கும் இரண்டு அப்பங்களை எப்படி மூன்று பேருக்கு பங்கு வைத்துத் தருவது என்பது பெரிய சவாலான காரியம்தான். எனக்கும் என் சகோதரர்களுக்குமிடையே சண்டை வந்துவிடும். அம்மாவே தலையிட்டு சமாதானம் செய்வார்.

திரையரங்குகளைத் தவிர்த்து, விருதுநகரில் பொழுதுபோக்க வேறு வழிகள் இல்லை. வார இறுதி நாட்களிலும் கோடை விடுமுறை நாட்களிலும் நாங்கள் சீட்டுக்கட்டை எடுத்து வைத்துக்கொண்டு பக்கத்து வீட்டு நண்பர்களோடு விளையாடுவோம். நாங்கள் குடியிருந்த "பதினெட்டு ஸ்டோர்" குடியிருப்புக்கு வடக்கே நகராட்சி சத்திரம் இருந்தது. பல வருடங்களாகக் கவனிக்கப்படாமல் பாழடைந்து இருந்த அதன் வளாகத்தில் நாங்கள் கிரிக்கெட் அல்லது ஹாக்கி விளையாடுவோம்.

**கண்களால் உண்ணுதல்:**

நானோ பொழுதுபோக்க வேறு வழிகளைத் தேடுவேன். விருதுநகரின் வீதிகளில் இலக்கு இல்லாமல் சுற்றித் திரிவேன். நகரின் மையமான மெயின் பஜாரில், நிறைய மிட்டாய்க் கடைகளும், பழக்கடைகளும் இருந்தன. அந்தக்கடைகளில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் தின்பண்டங்களை வாயில் உமிழ் நீர் ஊற, ஆசையாய் பார்த்துக்கொண்டே நின்றுகொண்டிருப்பேன். தென்மாவட்டங்களில் கருப்பட்டி மிட்டாய் ரொம்ப புகழ் பெற்றது. சுருள் சுருளாய் வட்டமாக வைக்கப்பட்டு, ஒன்றன்மேல் ஒன்றாகச் சுருள்களாக அடுக்கப்பட்டு, உயரமாக, கிட்டத்தட்ட ஒரு பீப்பாய் வடிவத்தில் அலங்காரமாக வைக்கப்பட்டிருக்கும் அந்த கருப்பட்டி மிட்டாயை எங்கள் வட்டாரத்தில் சிலர் சீரணி என்றும் சொல்லுவார்கள். அதன் வெளிப்புறத்தில், கருப்பட்டியின் ஜீரா பாகு வழிந்துகொண்டிருக்கும். அதன் மேல்



தேனீக்கள் பறந்துகொண்டிருக்கும். மெர்க்குரி விளக்கு வெளிச்சத்தில் கன கம்பீரமாக நிற்கும் அந்தக் கருப்பட்டி மிட்டாயின் இருப்பு, போவோர் வருவோரைச் சுண்டி இழுக்கும். அத்தோடு, சீனிச்சேவு, பூந்தி, சீனியில் புரட்டிய லட்டு, அதிரசம், ஜீராப்பாகில் சொகுசாக மிதந்துகொண்டிருக்கும் குலாப் ஜாமூன் பந்துகள்.. என்று எல்லாமே என் பார்வையின் மூலமாக என் வாய்க்குள் போய்க்கொண்டிருக்கும்.

விருதுநகரின் இருதயம் போன்ற மையத்தில் இருந்த பராசக்தி மாரியம்மன் கோவில் அருகே ஓங்கி வளர்ந்த ஒரு வேப்ப மரத்து நிழலில் நின்றுகொண்டிருந்த “அன்டன் பேக்கரி” என் பார்வையிலிருந்து எப்போதும் தப்பாது. அவர்களின் கடையின் அலமாரிகளில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் பெரிய பெரிய கண்ணாடி ஜாடிகளுக்குள் அடைபட்டுக் கிடக்கும் இனிப்புகள் எல்லாமே என்னைச் சுண்டி இழுக்கும். “அன்டன் பேக்கரி” அந்த தாலுகா முழுக்கப் பிரபலமான கடையாகும். கேரளாவைச் சேர்ந்த ஒரு கிறித்தவர் அதை நடத்தி வந்தார். காலையிலிருந்து இரவு வரை ஓயாமல் வணிகம் நடக்கும். அந்தக் கடையின் முன்புற அடுக்குகளில் இருக்கும் ஒரு கண்ணாடி ஜாடி எப்போதும் என் கண்ணைக் கவரும். இஞ்சியை செதில் செதிலாகச் செதுக்கி, அதை ஜீனிப்பாகில் ஊற வைத்துத் தயாரித்திருக்கும் இனிப்பு அது. ஒரு தடவையாவது அதை வாங்கி ருசி பார்க்கும் ஆசை எனக்கு இருந்ததுண்டு. ஆனால் பையில் சில்லறை இருக்காது. கண்ணால் கண்டு, மானசீகமாக அவற்றை உண்டு களித்திருப்பேன். பார்த்தால் பசி தீரும் என்பார்கள். உண்பவன் ஒன்றை மட்டும் உண்கிறான். உண்ணாமல் பார்ப்பவன் எல்லாவற்றையும் உண்கிறான்.

தீபாவளி பலகாரச் சீட்டு என்று நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? சந்தா கட்டுபவரிடமிருந்து, ஒவ்வொரு வாரமும் பத்து ரூபாய் மட்டும் வசூல் செய்யப்படும். ஒரு வருடம் முடிந்ததும் தீபாவளிக்கு ரெண்டு தினங்களுக்கு முன்பு, ரெண்டு சமையல்காரர்களை வரவழைத்து, பெரிய கொட்டகையைப் போட்டு, தீ மூட்டி, ஓர் ஆளே உட்காரும் அளவுக்கு அகலமான இலுப்பச் சட்டிகளில் பலகாரங்கள் தயார் செய்யப்படும். மைசூர் பாகு, பூந்தி, மிக்சர் ஆகியவற்றை தயார்செய்து, ஆவி பறக்க பனை ஓலைப்பாய்களில் அவற்றைப் பரப்பி வைப்பார்கள். சந்தா கட்டியவர்களை வரவழைத்து, அவர்களுக்கான பங்கைத் தருவார்கள். ஒவ்வொருவருக்கும், ஒவ்வொன்றிலும் ஒரு கிலோ, ரெண்டு கிலோ கிடைக்கும். இலுப்பச் சட்டிகளில் மைசூர் பாகு தயாராகும்போது, அருகே




நின்று, அதைக்கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பேன்.

**பீம புஷ்டி ஹல்வா:**

பங்குனி மாதத்தில் மாரியம்மன் அக்கினிச்சட்டித் திருவிழா அமோகமாக நடக்கும். ஊரில் நிக்கக்கூட இடம் இருக்காது. எல்லாத்தெருக்களும் ஜனக்கூட்டத்தால் நிறைந்திருக்கும். அந்தக் கூட்டத்தில் எல்லா வணிகமும் நடக்கும். வளையல்கள், பொம்மைகள், குளிர்பானக் கடைகள், பஞ்சு மிட்டாய் என்று கல்லா கட்டும் நல்ல வியாபாரம். அந்த வணிகக் களேபரத்தில், ஒரு தள்ளுவண்டியில் வைத்துக்கொண்டு வரப்படும் அல்வாவை நான் காணத்தவற மாட்டேன். ஒரு நாலுசக்கர வண்டியில், ஒரு பக்கமாய், பெரிய வரைபடத்தில், காவிய வீரன் பீமன் தன்னிடம் வந்து நிற்கும் பயில்வானுக்கு கையில் அல்வாவை எடுத்துக் கொடுப்பது போன்ற காட்சி வரையப்பட்டிருக்கும். அந்தச் சித்திரத்தில் பீமனின் முன்பு நிற்கும் வரிசை வெகு நீளமானது. அந்தக் கருப்பு–வெள்ளைப் படம்தான் அந்த வியாபாரத்தில் அனைவரின் கருத்தையும் ஈர்க்கும் விஷயம். அந்த அல்வாவின் பெயர் “பீம புஷ்டி அல்வா”. அந்த வண்டியின் மேலே பெரிய, சதுரமான கட்டியாக வைக்கப்பட்டிருக்கும் அல்வாவில் முந்திரிப்பருப்பு ஆங்காங்கே துருத்திக் கொண்டிருக்கும். செக்கச்செவேல் என்று செந்நிறத்தில் இருக்கும் அந்த இனிப்பான அல்வாவின் மேல் ஒரு லட்சம் ஈக்கள் அமர்ந்துகொண்டு, நமக்கு முன்பே அதை ருசி பார்த்துக்கொண்டிருக்கும். இரண்டடி நீளமுள்ள அகலமான கத்தியை எடுத்து, அந்த அல்வாவின் மேல், ஓங்கி ஓர் அடி அடிப்பார் அந்த வியாபாரி. அந்தச் சத்தம் சுற்றுப்புறம் எங்கும் கேட்கும். தெருவில் வருவோர், போவோரின் கவனத்தை ஈர்க்கும் அந்தச் சத்தம்.. பார்க்கும்போதே அரைக்கிலோ அல்வாவை வாங்கிச் சாப்பிடத் தோணும். ஏக்கமும் ஆசையும் தலை தூக்க, அவை எல்லாம் வெறும் ஆசைகளாகவே, நிறைவேறாமல் கடைசி வரை இருந்து விட்டன.

**அக்கார அடிசில்**

விருதுநகரில் “குருகுல வாசம்” முடிந்த பிறகு, என் சொந்த ஊரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்துசேர்ந்தேன். எனக்குப் பரிச்சயப்பட்ட ஊர்தான் என்றாலும், அந்த ஊர் காலச்சக்கரத்தில் ஐம்பதாண்டுகளுக்குப் பின்னே இருப்பதாக எனக்குத் தோன்றியது. பாவை பாடிய கோதை நாச்சியாரின் கோவிலில் நடக்கும் “சாத்துமுறைக்கு” அனுதினமும் சென்றுவிடுவேன். ஆண்டாள்-ரங்கமன்னாரின் முன்னே நின்றுகொண்டு பிரபந்தப் பாசுரங்களைப் பாடும் சாற்றுமுறை நிகழ்ச்சி என்பது நடக்கும். “சாற்றும் முறை” என்பதுதான் “சாற்றுமுறை”யாகி, பின்னே “சாத்துமுறை”யாக மருவியது. சில நாட்களில் கோஷ்டி முடிந்ததும், சூடான சக்கரைப் பொங்கல் தரப்படும். ஓர் உள்ளங்கை அளவே தரப்படும் அந்தப் பொங்கல் அவ்வளவு ருசியாக இருக்கும்.



சில நாட்களில் அக்கார வடிசல் பிரசாதமாகத் தரப்படும். இதன் நிஜப்பெயர் அக்கார அடிசில்.

பால், நெய், அரிசி, பயத்தம் பருப்பு, வெல்லம், ஏலக்காய்த் தூள், பச்சைக் கற்பூரம் இவை கலந்து இந்த அக்கார வடிசல் செய்யப்படுகிறது. பொதுவாக சோறு சமைக்கப்படும் போது அரிசி நீரில் வேக வைக்கப்படும். ஆனால் அக்கார அடிசில் செய்யும்போது பச்சரிசியானது பாலில் வேக வைக்கப்படுகிறது. இது சர்க்கரைப் பொங்கல் போல திடமாகவும் இராது. கொஞ்சம் இளகி இருக்கும். நான் முதலிலேயே உங்களை எச்சரிக்க விரும்புகிறேன். இதை ஒருமுறை ருசி பார்த்துவிட்டால், அதற்குப் பின்பு நீங்கள் இந்த அக்கார வடிசலுக்கு அடிமையாகி விடுவீர்கள். தாராளமாக, கூச்சமில்லாமல், நெய்யைக் கொட்டித் தயார் செய்யப்படும் இந்தப் பதார்த்தம் சாப்பிட அத்துணை ருசியானது. இது தேவலோக உணவு என்று எண்ணுகிறேன். ஆனால் இவ்வளவு கொழுப்பு உங்கள் உடலுக்குள் போனால் கண்டிப்பாக உடல் உபாதைகள் வரும்.

எங்கள் ஊரில் இருக்கும் வைணவர்கள் ஐம்பது வயதைத் தாண்டியதும் சக்கரைச்சத்து நோயாளிகளாக மாறுவதற்கு இரண்டு உணவுகளை என்னால் சுட்டிக்காட்ட முடியும். ஒன்று இந்த அக்கார வடிசல். இன்னொன்று நெய்யிலேயே தயாரான சக்கரைப் பொங்கல். வெண்பனி சில்லிடும் காலைப்பொழுதுகளைக் கொண்ட மார்கழி மாதத்தில். "சிற்றம் சிறுகாலையில்" எழுந்து, "நாட்காலே நீராடி", நெற்றியில் திருமண் இட்டுக்கொண்டு, ஆண்டாள் திருக்கோவிலுக்குச் சென்று பக்தர் குழாமோடு சேர்ந்துகொண்டு, அன்றைய திருப்பாவைப் பாசுரத்தை ஸ்வரம் மாறாமல் பாடிவிட்டு, அங்கு சன்னதியில் தரப்படும் இந்த சூடான சக்கரைப் பொங்கலில் ஏலம், கிராம்பு, முந்திரிப்பருப்பு, கிஸ்மிஸ் பழம், அளவு கடந்த பசும் நெய் இடப்பட்டு தயார் செய்யப்பட்டிருக்கும். ஓர் உள்ளங்கை மட்டுமே தரப்படும் இந்தப் பொங்கலை உண்டதும், இன்னொரு கை பொங்கல் கிடைக்காதா என்று ஏக்கம் கொள்ள வைக்கும். நல்ல உணவின் அடையாளம் என்னவென்றால் சிறிதளவு உண்டாலும், அது திருப்தி தருவதே. அளவு முக்கியமல்ல. அதன் ருசி வாயில் நிறைந்து, மனதையும் நிறைக்க வேண்டும். நிறைக்கும்.

ஆண்டாளின் பாசுரத்தை வாசிக்கும்போதே, இந்தச் சுவை நம்மை சுண்டி இழுக்கும்.

நெய் வழிய அக்கார அடிசல்

"ஆடையுடுப்போம் அதன் பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்..."

- "கூடாரை வெல்லும்" திருப்பாவை 27-ம் பாசுரம்

முழங்கையில் நெய் வழிந்தால்தான் அது அக்கார வடிசல். வாசிக்கும் போதே நமக்குச் சாப்பிட்டதைப் போன்ற திருப்தி ஏற்படும்.

"...நாறுநறும் பொழில்மா லிருஞ்சோலை
நம்பிக்குநான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து
பராவிவைத்தேன்
நூறுதடா நிறைந்த அக்கார வடிசில்சொன்னேன்..."

- நாச்சியார் திருமொழி, 89-ம் பாசுரம்

பாலிலும், நெய்யிலும், சர்க்கரையிலும் தயாரான நல்ல ருசியான அக்கார வடிசலை விட, ஆண்டாளின் இந்தப் பாசுரம் இனிப்பாக இல்லையா?!!

அக்கார வடிசல் போலவே இன்னொரு உணவு எனக்குப் பிடித்தமானது. அது அமிர்த கலசம். இது வெண்மை நிற உருண்டைகளாக இருக்கும். அரிசி மாவு, பாசிப்பயறு, நெய், வெல்லம் ஆகியவற்றால் தயாராகும் இந்த உணவு, என் வீட்டுக்கு வந்துசேர்ந்தால், எத்தனை உருண்டைகள் அதில் இருக்கின்றன என்று எண்ணிப் பார்ப்பேன். பத்து உருண்டைகள் இருந்தால், அதை அப்படியே வைத்துக்கொண்டு, மறுநாள் காலையில், குளித்துவிட்டு, வெகு ரசனையோடு உண்பேன். அத்துணை ருசியான உணவு அது!!

இப்படி, நெய்யும் பாலும் இட்டுச் செய்யப்படும் பொங்கல், அமிர்த கலசம், அக்கார வடிசல் வகையறாக்களை அதிகமாக உள்ளே தள்ளிக்கொண்டிருந்தால் உடல் உங்கள் கட்டுப்பாட்டில் இருக்காது. விரைவில் அது மருத்துவரின் கட்டுப்பாட்டுக்குச் சென்றுவிடும்.

“தமிழக வைணவர்களின் உணவுப் பழக்க வழக்கங்கள்” என்ற தலைப்பில் ஒரு முனைவர் பட்ட ஆய்வே செய்யலாம். அந்த அளவுக்கு அதில் நிறைய பொருண்மைகள் நிறைந்திருக்கிறது என்று எண்ணுகிறேன்.

### கோவில்பட்டி கடலை மிட்டாய்

என் குடும்ப நண்பர் இந்திராணி அம்மாவின் சொந்த ஊர் கோவில்பட்டி. அவர்கள் தன் தாய்வீட்டுக்குப் போய்விட்டு வந்தால், எனக்கு அந்த ஊரிலிருந்து கடலை மிட்டாய் வாங்கிக்கொண்டு வருவார். சாத்தூர் சேவுக்குப் புகழ் பெற்றது. கோவில்பட்டி கடலை மிட்டாய்க்குப் பெயர் பெற்றது. அந்த ஊரைக் கடந்துபோகும் மக்கள், அதை ருசி பார்க்காமல் போவதில்லை. ஒவ்வொரு தடவையும் எனக்கு ரெண்டு பாக்கெட்டுகள் அன்பளிப்பாக வரும். ஒன்று இந்தக் கடலை மிட்டாய். இன்னொன்று சேவு. இதை நான் பத்திரப்படுத்தி ரெண்டு வாரங்களுக்கு வைத்திருந்து சாப்பிடுவேன். கோவில்பட்டி கடலை மிட்டாயின் ருசியின்



ரகசியம் என்னவென்று எனக்குத்தெரியாது. ஆனால் கரிசல் எழுத்தாளர் கி. ராஜநாராயணனுக்குக் கண்டிப்பாகத் தெரிந்திருந்தது. நல்ல கடலையை எடுத்துக்கொண்டு, அதை நன்கு புடைத்துவிட்டு, அதில் பொக்கு, கருப்பு, வாடல் இல்லாமல் சுத்தப்படுத்திக்கொண்டு, பிறகு அதைப் பொன்னிறமாக வறுத்து எடுத்துக்கொண்டு, அதில் ஸ்ரீவில்லிபுத்தூர் பகுதிகளில் தயாரான மண்டை வெல்லத்தின் இளகிய பாகினைச் சேர்த்து என்று எழுதியிருப்பார் கி.ரா அவர்கள். எனவே கோவில்பட்டி கடலை மிட்டாயின் ருசியின் காரணம் என்னவென்று இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

எங்கள் ஊரின் வடக்கு ரத வீதியில் நகைக் கடைகளின் அருகே ஒரு வெள்ளாஞ் செட்டியார் மிட்டாய்க்கடை வைத்திருக்கிறார். காலையில் எட்டு மணிக்குத் தொடங்கும் அந்த வியாபாரம் விறுவிறுப்பு குறையாமல் இரவில் பத்து மணி வரை நீடிக்கிறது. கடையின் முன்புற வாசல் அருகே அகன்ற இரும்பு இலுப்பச்சட்டி வைக்கப்பட்டு, அதில் கருப்பட்டி மிட்டாய் தயார் செய்யப்படுகிறது. காணும்போதே அதன்மேல் இருக்கும் ஜீராவின் காட்சி நமது மனதுக்குள் ரசாயன விளைவுகளை உண்டுபண்ணும். விருதுநகரில் மாரியம்மன் கோவில் வாசலில் நான் கண்ட அதே கருப்பட்டி மிட்டாய்தான். இங்கு கொஞ்சம் ஏலக்காய் மணமும் வீசும். ஒவ்வொரு முறை நான்

அந்தக் கடையைக் கடந்துபோகும் போதெல்லாம், கால் கிலோ மிட்டாயை வாங்கிக்கொள்ளுவேன். அதன் அருகிலேயே சங்கீதக் கச்சேரிகளில் வயலினுக்குப் பக்கவாத்தியமாக மிருதங்கம் இருப்பதைப் போல இந்தக் கருப்பட்டி மிட்டாய்க்குப் பக்கவாத்தியம் போல அமர்ந்திருக்கும் வெங்காய பக்கோடா. இலுப்பச் சட்டியிலிருந்து அப்போதுதான் வெளியேறி தட்டில் சூடாக, மொறு மொறுவெனத் தயாராக இருக்கும். அதில் நூறு கிராம் கருப்பட்டி மிட்டாயும், வெங்காய பக்கோடாவும், நல்ல பொருத்தமான ஜோடி. இந்த இரண்டும் இருந்தால் போதும், என் மாலைநேரச் சிற்றுண்டி முடிந்தது.

### ஸ்ரீவில்லிபுத்தூர் பால்கோவா:

ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்துகொண்டு, பால்கோவாவைப் பற்றிப் பேசாமல் போவது என்பது கல்கத்தாவில் வாழ்ந்துகொண்டு ரசகுல்லாவைப் பற்றிப் பேசாமல் இருப்பதைப் போலாகும். புவிசார் குறியீடு பெற்று உலகப்புகழ் பெற்றுவிட்ட, எங்கள் ஊர் பால்கோவாவைப் பற்றி இந்தக் கட்டுரையில் ஓரிரு வார்த்தைகள் சொல்லாமல் விட்டுவிட்டால், எங்கள் ஊர் மிட்டாய் வியாபாரிகள் என்மீது வழக்குப் போட்டு விடுவார்கள். நான் எந்த வெளியூருக்குச் சென்று யாரைச் சந்தித்துப் பேசினாலும், அவர்கள் என்னிடம் பேசும்போது, பால்கோவாவைப் பற்றிப் பேசாமல் இருக்க மாட்டார்கள்.

நிறைய ஊர்களில் இந்தப் பால்கோவா தயாரிக்கப்படுகிறது என்றாலும், எங்கள் ஊர் பால்கோவா பிரசித்தி பெற்று விளங்குகிறது. பல வருடங்களுக்கு முன்பு ஒரு பிரபல ஆங்கில நாளிதழில் இந்தப் பால்கோவா இவ்வளவு ருசியாக இருப்பதற்கு என்ன காரணம் என்று ஏதோ ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்டியிருந்தேன். எங்கள் ஊருக்கு வரும் எவரும், ஒரு பொட்டலம் பால்கோவாவையாவது



வாங்காமல் போகமாட்டார்கள் என்று அறுதியிட்டுக் கூறுகிறேன். பலவிதமான வணிகங்கள் துவக்கப்பட்ட எங்கள் ஊரில் அவையெல்லாம் விரைவிலேயே மூடப்பட்டு இப்போது இந்தப் பால்கோவா விற்கும் கடைகள் மற்றும் உணவகங்களே அதிகரித்து விட்டன என்பது கண்கூடு. "இந்த ஊரே தின்னிப் பண்டாரங்கள் நெறஞ்ச ஊரு போல" என்று என் நண்பர்களிடம் அடிக்கடி சொல்லுவேன். எங்கள் ஊர் பால்கோவாவுக்கு அப்படி என்ன தனி ருசி?!!? விஷயம் இதுதான். நல்ல தரமான பால்! அது கண்டிப்பாக உங்கள் பெருநகரங்களில், பால் பவுடரால் தயாரிக்கப்பட்டு, பாலிதீன் பாக்கெட்டுகளில் அடைக்கப்பட்டு கன ஜோராக விற்கப்படும் குளிரூட்டப்பட்ட பால் அல்ல. அது செயற்கையானது.

எங்கள் ஊரின் மேற்குப்புறம் உள்ள கம்மாப்பட்டி, திருமலாபுரம் ஆகிய சிறு கிராமங்களில் உள்ளவர்கள்தான் எங்கள் வட்டாரத்துக்கே பால் வழங்கும் ஆயர்கள். அந்த ஊர்களே கோகுலம் என்று ஆண்டாள் கற்பித்துக்கொண்டுப் பாடியிருக்கலாம். அந்நாளில் ஆநிரைகள் வீடுகளின் புழக்கடையில் கட்டப்பட்டிருக்கும். அங்கேயே சிறு தோட்டமும் இருக்கும். அந்நாளில், அதிகாலையில் அந்தப்பசுக்கள், "கீழ்வானம் வெள்ளென்று...சிறுவீடு" மேய்ச்சல் காணும். இந்நாளில், கால்நடைக் கூட்டத்தையெல்லாம் காலையில் பத்திக்கொண்டு, ஊருக்கு அப்பால் உள்ள

மேற்குத்தொடர்ச்சி மலையடிவாரங்களுக்கு "பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த" மேய்ப்பர்கள் கொண்டு செல்லுவார்கள். "கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்பார்கள்". அங்கு செழிப்பான மலையடிவாரங்களில் முளைத்திருக்கும் புல்லை இந்த ஆநிரைக் கூட்டம் மேயும்.

ஆநிரை கவர்ந்தால் யுத்தம் வரும் என்பது அக்காலத்தில். நல்ல நிலத்தில் ஆநிரைகள் மேய்ந்தால் நல்ல பால் வரும் என்பது இக்காலத்தில். ஆதவன் வீழும் சமயத்தில் செங்கமங்கலாய் இருக்கும் சந்தியா கால வேளையில் இந்தப் பசு மாடுகள் எல்லாம் ஊர் திரும்பும். மாட்டுக் கொட்டத்தில் அவை அமர்ந்து, சாவகாசமாக உண்டதை ரா முழுக்க அசை போட்டுக்கொண்டிருக்கும். அதிகாலை மூன்று மணியளவில் அவைகளிடம் பால் பீய்ச்சப்படும். நல்ல பசுமைச் செழிப்பான நிலத்தில் விளைந்த பசும்புல்லை மேய்ந்த "கற்றுக்கறவைக் கணங்கள் பல கறந்து" அவை யாவும் "மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்" என்று ஆயர்கள் அறிவார்கள்.

அடியேன் மேற்சொன்ன கம்மாப்பட்டி, திருமலாபுரம் ஆகிய கிராமங்களில் வாழும் ஆயர் யாவரும் கோபாலர்களே! அவர்கள் பசுக்களைத் தெய்வங்களாக வழிபடுபவர்கள். அப்படி வழிபாடு செய்யப்பட்ட பசுக்கள் தரும் அந்தப்பாலின் ருசி சொல்லில் அடங்காதது. இந்தப் பாலை நன்கு காய்ச்சினால் அது கெட்டிப்படும். கெட்டிப்பட்ட பாலில் மைதா மாவையும் சர்க்கரையையும் சேர்த்தால் அது பால்கோவாவாகும். தெய்வங்களாக வழிபடப்பட்ட பசுக்கள் தரும் பால் அதிக ருசியாகத்தான் இருக்கும். நல்ல ருசியான பாலைப் பயன்படுத்தினால் நல்ல ருசியான பால்கோவா வரும். இதுதான் எங்கள் ஊரின் பால்கோவா ருசியாக இருப்பதற்கு காரணம். எல்லாவற்றுக்கும் அடிப்படை நல்ல மேய்ச்சல் நிலம். நல்ல பசும்புல். நன்கு இறை வழிபாடு செய்யும் மேய்ப்பர்கள்.

இதுவரை சொல்லப்பட்ட இனிய பலகாரங்களைச் சாப்பிட்டால் சக்கரை வியாதி வராதா, என்று கேட்பவர்களுக்கு எமது பதில் இதுதான். எதையும் அளவோடு சாப்பிட்டால் ஒரு தீங்கும் வராது. தென் மாவட்டங்களில் கிடைக்கும் ருசியான உணவுகளுக்காகவே நீங்கள் ஒரு சுற்றுப்பயணம் மேற்கொள்ளலாம். உல்லாசச் சுற்றுலா, மருத்துவச் சுற்றுலா, ஓய்வெடுக்கும் சுற்றுலா, பக்திச் சுற்றுலா போன்றே உணவுச் சுற்றுலா என்ற ஒரு பயணத்தை நீங்கள் மேற்கொண்டால் என்ன? இதற்குமுன் யாரும் அப்படி ஒரு பயணம் போயிருக்க மாட்டார்கள்.

தென் மாவட்டங்களில், குற்றாலம் அல்லது சபரிமலைக்குப்போகும் வழியில் புளியங்குடி அருகே உள்ள சொக்கம்பட்டி என்ற ஊர் அல்வாவுக்குப் பிரசித்தி பெற்றது. அங்கு உள்ள கடைகளில் கருப்பட்டி அல்வா, பாதாம் அல்வா, போன்றவற்றை வாங்கி ருசி பாருங்கள். "அல்வாவின் பூர்வீகம் சொக்கம்பட்டி தான் என்று அங்கு விளம்பரம் வேறு செய்திருக்கிறார்கள். இந்த விளம்பரமா நமக்கு முக்கியம்? நாக்கில் நீர் வடிய, அந்தக் கருப்பட்டி அல்வாவை நீங்கள் எடுத்து விரல்களால் உள்ளே தள்ளும்போது, அடடா... என்ன இனிமை...?!? கருப்பட்டி அல்வாவை உண்ணும்போது, கருப்பட்டியையும் மறந்து விடாதீர்கள். நல்ல உடன்குடி கருப்பட்டி கிடைத்தால் வாங்கி ருசி பாருங்கள். தின்பண்டம் போலவே அதைச் சாப்பிட்டு விடுவீர்கள்.

அந்நாளில், கண்ணில் கண்ட இனிப்புப் பண்டங்களை எல்லாம் வாங்கிச் சாப்பிட எண்ணினேன். பையில் பணம் இல்லை. இன்று பணம் இருக்கிறது. வாங்கி ருசி பார்க்கும் வயது போய்விட்டது. அதை அதை அந்த அந்த வயதில் அனுபவிக்காமல் என்ன வாழ்வு?!!?

rameshzillion@hotmail.com ■

கவிதை

கண்ணன் விஸ்வகாந்தி

# பொதி சுமப்பவன்

தாத்தா சுமந்தது இன்று வரை
தொடர்கிறது
தலையில் சுமந்து வருவார்
மாம்பழமும் புத்தகங்களும்
அவ்வப்போது ஆயாவிடம் தந்துவிட்டு
தேசாந்திரம் சென்றிடுவார்
அப்பா சைக்கிளில் வைத்து
தள்ளி வருவார்
கால்கள் ஓய்ந்த பின்னர்
சுமந்து வந்தார் கைகளிரண்டிலும்
இப்போது எனது முறை
இடையில் சற்றே இளைப்பாற
தோள் கொடுத்தவர்களைக் காணாமல்
கோவில் திருவிழாவில்
பெற்றோரைத் தேடும்
சிறுவனாகத் தடுமாறி, பின்னர்
நுகத்தடியில் பொருத்தினால்
சுற்ற ஆரம்பிக்கும் செக்குமாடாய்
தொடர்கிறேன் நானும்
இன்னும் ஆறு வருடங்கள்
என
அலுவலகம் சொல்ல
துணைவியோ
அதற்குப் பிறகும் நான்தான்
என்கிறாள்
சுமக்கப் பிறந்தவனுக்கு
எதற்கு
விடுமுறையும் சொரணையும்

vkannan10@gmail.com ■

கவிதை

கோசின்ரா

நான் பெயரற்றவனின் தொடர்ச்சி
நான் சாதியறியாதவனின் சிறு விதை
நான் முகமற்றவனின் ஒரு முகம்
அடையாளம் அழித்தலிருந்து
எழுந்த வந்த அடையாளம்
அடையாளங்களே
பெருங்காடுகளாய் வளர்ந்து நிற்கும் நிலத்தில்
அடையாளத்தை அழிப்பது சாத்தியமில்லை
ஒரு பெரு மலை சிறு சிறு பிளவுகளாய் மாறி
துகளாகும் வரை
புதுப்புது பெயரை அணிந்துக்கொண்டு விட்டது
பெரும் அடையாளம் உடைக்கப்பட்டு விட்டது
பிளக்கப்பட்டு விட்டது
மீண்டும் உடைக்கப்படுகிறது
உள்ளீடு அப்படியே இருக்க
மீண்டும் பெரும் அடையாளம் கூட்டப்படுகிறது
ஒரு அடையாளத்தில் அருகிருந்து
கை குலுக்கி சிரித்தவன்
வேறொரு அடையாளத்தில்
என்னை அழிக்க முனைப்பு காட்டுகின்றான்
அடையளங்களுக்காக சாக விரும்புகின்றான்
அடையாளங்களால் கொல்லப்படுகின்றான்
அடையாளமற்ற தொடக்கத்திற்கு
மீண்டும் செல்ல முடியாமல்
பின்னுக்குத் இழுக்கின்றன
பிளவுண்ட அடையாளங்கள்

gcrajendran@gmail.com ■



கட்டுரை
யாழ் ராகவன்

# கவிதைக் கிளையில் மரகதப்புறா

வாசகனின் உணர்வுகளுக்குள் புகுந்து கிளர்ச்சியடையச் செய்து புலன் அனுபவங்களை ஈர்த்து புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சுவது நல்ல சிறுகதைக்கான இலக்கணம் என்பரர் எட்கர் ஆலன்போ.

கவிதை, மொழிபெயர்ப்பு, பாடல், ஹைக்கூ, சிறுகதை என இலக்கியத்தின் எல்லா நதிகளும் ஒன்றுகூடும் கலைக்கடலாய் கவிஞர் தங்கேஸ். ஓய்வின்றி எழுதிக் குவிக்கும் அந்த மனதுக்குள் புதிதாய் பூத்த சிறுகதை தொகுப்பு மரகதப் புறா.

விளிம்பு நிலை மாந்தர்களும், சமூகத்தின் முரண்களும் ஒரு படைப்பாளியின் கூர் தீட்டப்பட்ட எழுதுகோலில் இருந்து பிரவாகம் எடுத்துக் கிளம்பும்போது அது மானுடத்தை அசைக்கிறது.

பறவைகளை, பூக்களை, வானத்தை, நிலவை, தண்ணீரை இன்னும் இன்னும் விரிந்து கிடக்கும் வானத்தை ஊடே நீந்தும் மேகத்தை பட்டுப்பூச்சி வண்ணத்துப்பூச்சி என்று இயற்கையின் சகல பரிணாமங்களையும் நேசிக்கும் ஒரு மனதுதான் சக மனிதனையும் பிரியத்துடன் அணைத்துக் கொள்ளும்.

அந்தச் சமூக நோக்கும் இரக்கம் கொண்ட பார்வையும் எழுத்தாளருக்கு இயற்கையாகவே வைத்திருப்பது சிறப்பு.

வித்தகன் கைபட்டால் விறகும் வீணையாகும் தகரமும் தங்கமாகும் பதரும் பவுன் ஆகும். நம்மைச் சுற்றி ஆயிரம் ஆயிரம் கதைகள் கொட்டிக் கிடக்கின்றன. அதை எழுத்தில் கொண்டு வருவதற்கு ஆழ்ந்த மொழிப் புலமையும் கோர்த்த சிந்தனை வெளியும் தேவையாகிறது. பல்வேறு விதமான அனுபவமும் சேரும்போது அமரகாவியம் பிறந்து விடுகிறது.

மரகதப் புறா என்ற முதல் கதை தொடங்கி காணாமல் போனவர்கள் என்ற கடைசி கதை வரை விறுவிறுப்பான மொழிநடை கவிதை நடையாகவும் ரசிக்கத்தான் வைக்கிறது.

உணர்வுகளைச் சுண்டி இழுக்கும் கருத்தோட்டம் கண்முன்னே விரியும் காட்சி படிமம் பல்வேறு விதமான பாத்திரங்களின் மன உணர்வுகள் நம்மை கதையோடு பொருத்திப் பார்க்க வைக்கிறது.

இத்தொகுப்பில் படைக்கப்பட்ட பெண் கதாபாத்திரங்கள் வலிகளைச் சொல்பவர்களாக அறிவில் சிறந்தவர்களாக உடல் உழைப்பு உயர்ந்தவர்களாக என பல்வேறு நிலைகளில் உள்ள பெண்களை படம் பிடித்துக் காட்டுகிறார்.

இளநீர் கதையில் மூன்று விதமான பெண்களை அவர் காட்டிச் செல்லும்போது அங்கே கதை தலைவனுக்கு வேலையில்லை ஓர் ஆண் பின்னின்று பெண் பாத்திரங்களை முன்வைத்து படைப்பது அற்புதம்

மரகதப்புறா என்ற கதையே குறியீட்டுக் கதையாக இருக்கிறது. ஒரு கதை மூன்று விதமான பொருளில் அமையுமா வாசிப்பவருக்கு அவரவர் தன்மைக்கேற்ற வேறு வேறு படிமங்களை கொடுக்குமா என்றெல்லாம் யோசிக்க வைத்த முதல் கதை மிக முக்கியமான கதை.

தொகுப்பில் “தேடாத கிளை இல்லை” என்ற கதை காதல் தோல்வியை இவ்வளவு அழுத்தமாக இத்தனை ரசனையாக கவித்துவமாகச் சொல்ல முடியுமா என்று யோசிக்க வைக்கிறது. அதற்கு ஆசிரியரின் வாசிப்போம் மொழி நடையும் திறமையும் காரணம் என்று சொல்லத் தூண்டுகிறது.

காணாமல் போனவர்கள் காடை என்ற இரண்டு கதைகள் வருகின்ற அம்மா கதாபாத்திரம் எல்லா அம்மாக்களையும் கண்முன்னே கொண்டு வருவது தவிர்க்க முடியாதது.

பள்ளிக்கூடம் தொடர்பான மூன்று கதைகளில் மாணவர்களின் இன்றைய நிலை, ஆசிரியர் சூழலை, அரசாங்கத்தின் நிலை என்று எல்லாவற்றையும் அலசி ஆராயும் கதைகள் சரியாக அமர்ந்திருக்கின்றன.

திரில்லர், அமானுஷ்யம், இயற்கை சாதிய சமூக மாறுபாடு, பெண் அவலம் ஆகிய சமூக கண்ணோட்டத்துடன் இந்த நூல் படைக்கப்பட்டு இருக்கிறது.




நகைச்சுவை உணர்வு இயற்கையாகவே கவிஞர் தங்கேஸ் அவர்களுக்கு உண்டு என்பதை படைப்பிலும் காண முடிகிறது.

மதச்சார்பின்மையை பறைசாற்றும் மிகப்பெரிய ஆயுதம் பசி என்று எஸ். ராமகிருஷ்ணன் சொல்வார்.

எடுப்பு - தொடுப்பு - முடிப்பு சரியாக அமைந்து விட்டால் கதை நன்றாக இருக்கும் என்று மகாகவி தாகூர் சொல்வார். எத்தனை விதமான கருத்துக்கள், மேற்கோள்கள் சொன்னாலும் அதையும் தாண்டி நிற்பது படைப்பாளரின் ஜீவ ஊற்று. அது இந்த தொகுப்பு முழுவதும் மிகச் சிறப்பாகப் பரவி வந்துள்ளது.

இன்னும் இன்னும் எண்ணச் சிறகுகளை இதய வானத்தில் சுதந்திரமாகப் பறக்க பறக்க விட அன்பின் வாழ்த்துக்கள்.

*மரகதப்புறா, சிறுகதை, ஆசிரியர் தங்கேஸ், பாரதி புத்தகாலயம், சென்னை பக்கம் 160, விலை 160.*

narasimmaragavan@gmail.com ■



கட்டுரை
கார்த்திக் கிருபாகரன்

# பிரியாணியும் அதன் பரவல்களும்

சமீபத்தில் நண்பர் ஒருவர் தொடர்பு கொண்டு, 'குலதெய்வம் கோவிலில் கிடா வெட்டுகிறோம் நீங்கள் அவசியம் கலந்துகொள்ள வேண்டும்' என அழைப்பு விடுத்தார். கிடாவெட்டு என்றாலே ஓர் அலாதிப் பிரியம். ஏனென்றால் கிடா வெட்டிய பிறகு ஆட்டு எலும்புகள், ஈரல்களையும், குடல்களையும் மசாலா சேர்த்து தண்ணீர் போல குழம்பு வைத்து சோற்றோடு பரிமாறுவார்கள். அந்த குழம்புக்கு வேட்டைச்சாறு என்றுகூட கிராமப் பகுதிகளில் ஒரு பெயர் இருக்கும். வாழை இலையில் சற்றே குழைவான சோற்றில், வேட்டை சாறை ஊற்றி அதோடு மட்டன் கிரேவியோ அல்லது நாட்டுக்கோழி வறுவல் வைத்து பிரட்டி சூடாக சாப்பிடும் போது அதன் சுவையை வேறு ரகம்தான். ஆனால் கிடாவெட்டில் பரிமாறப்பட்டதோ வேறு, கிடா வெட்டியது அதை பிரியாணியாகச் செய்து பரிமாறினார்கள். சைவ உணவு பிரியர்களுக்கு சாம்பார், கூட்டுப்பொரியல், ரசம் என அது ஒரு தனிரகம் இருந்தது. சாப்பிட்டு முடித்து அனைவருக்கும் ஓர் ஐஸ்கிரீம் பரிமாறப்பட்டது. நண்பரை அழைத்து ‘கிடாவெட்டு என்றாலே வேட்டைச்சாறு, மிளகு ரசம் இதுதான். நீங்கள் என்ன பிரியாணிக்கு மாறி விட்டீர்கள்’ என்று கேட்டேன்

அவர் சொன்னார் “இப்போது இதுதான் லேட்டஸ்ட் ட்ரெண்ட்” என்று. எனக்கு பெரும் ஆச்சரியத்தை உண்டாக்கியது. காரணம் அந்த பகுதி கிராம பஞ்சாயத்தில் உள்ள குக்கிராமம். அதுவும் பிரியாணியை விட வேட்டைச்சாறு வருவல் தயாரிப்பதால் செலவு குறைவுதான். பிரியாணி தயாரிப்பு செலவு அதிகம். அப்படி இருக்கையில் எல்லா மட்டம் வரையிலும் பிரியாணி பரவி கிடப்பது ஒரு ஆச்சரியம்தான். சமீபத்திய பல விசேஷங்களிலும் கறி விருந்து என்றால் இப்போது பிரியாணி என்றும் பழக்கமே கொண்டுவந்து விட்டார்கள். கடந்த சில வருடங்களில் பல விசேஷங்களில் கறி விருந்துகளில் பிரியாணி செய்யும் பழக்கம் மாறிவிட்டது. “சரி இது மாறினால் என்ன உனக்கு? பிரியாணி பிடிக்காதா?” என்ற கேள்வி எழும்.

எனக்கு மட்டுமல்ல, குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அலுப்புத் தட்டாத ஓர் உணவு என்றால் பிரியாணிதான். தெருவுக்குத்தெரு விளக்குகள் இருக்கிறதோ, இல்லையோ! வீதிக்கு வீதி பிரியாணிக் கடைகள் அதிகமாகிக்கொண்டே போய்விட்டது. சிறந்த அசைவ விருந்தோம்பலாக இருந்த நம் விருந்தோம்பல் மாறி இப்போது

மட்டன் (அ) சிக்கன் பிரியாணி, பிரட் அல்வா, இறுதியாக கூல்-டிரிங்க்ஸ், ஐஸ்கிரீம் என்று பரிமாறுகிறார்கள். நண்பர்கள் மூன்று பேர் சேர்ந்து ட்ரீட் என்றதும், அவர்களின் முதல் தேர்வு பிரியாணிதான். அதுவும் எல்லா கடைகளிலும் வரிசை கட்டி கிடைப்பதால் எங்கே நல்ல பிரியாணி கிடைக்கும் என்று பல யூ-டியூப் ரீல்ஸ்களில் பார்த்து அந்த கடையை தேர்ந்தெடுத்து அங்கு சென்று சாப்பிடுகிறார்கள். இந்தியாவில் ஆன்லைன் ஆர்டரின் பிரியாணி என்றுமே முதலிடம்தான்.



'ஞாயிற்றுக்கிழமைனா பிரியாணி சாப்பிட்டே ஆக வேண்டும்' என்று பல குடும்பங்கள் ஆகிவிட்டது.

அடுத்து அளவுக்கு மீறி மது குடித்து, கூடவே பிரியாணி சாப்பிடக் கொண்டு வந்தார்கள். அப்பறம் மதிய உணவாக பிரியாணி என்று தின்றார்கள்.

பின் அதனை இரவு வரைக்கும் வைத்து உண்ண ஆரம்பித்தார்கள்.

இப்போது நடுராத்திரி 12 மணி வரைக்கும் தின்று அதற்கு 'மிட் நைட் பிரியாணி' என்று பெயர் வைத்துள்ளார்கள். அதுபோக முக்கிய நகரங்களில் இரவு 2 மணி, 3 மணிக்குக்கூட பிரியாணி கடை இருக்கிறது. வியாபாரமும் நடக்கிறது.

இப்போது விடியற்காலை 4 மணிக்கெல்லாம் "இயர்லி மார்னிங் ப்ரஷ் பிரியாணி" (Early Morning Fresh briyani) என்று சாப்பிட ஆரம்பித்து விட்டார்கள். ஆப் பிளேட், குவாட்டர், பக்கெட் என்று அளவு வித்தியாசம் உள்ளது. இந்தியாவில் பிரியாணி ரகங்களிலே மொஹாலி, ஹைதராபாத், கல்கத்தா, பம்பாய், ஆற்காடு, வாணியம்பாடி, திண்டுக்கல் எனப் பலவகை பிரியாணி பட்டியல்கள் உள்ளது.

சரி... பிரியாணி எப்படி இந்தியாவிற்குள் வந்து இன்று பட்டிதொட்டி எல்லாம் பரந்துவிரிந்து கிராமங்கள் வரை சென்றுள்ளது. ஏனென்றால் ஒவ்வொரு உணவுக்கும் வரலாறு உண்டு. நகைச்சுவையில் சொல்வது போல "வரலாறு மிக முக்கியம் அமைச்சரே!". பிரியாணியின் வரலாறையும் பார்ப்போம். பிரியாணி அதன் பொருள் பார்சி மொழியில் பிரியான். அதற்கு வறுத்த உணவு என்று பொருள். காலப்போக்கில் பிரியாணியாகி உள்ளது. பிரியாணி வரலாறு தொடக்கம் பெர்சியாவா அல்லது அரேபியாவா என்று குழப்பமும் விவாதமும் இன்றும் உள்ளது. மங்கோலிய அரசர் தைமூர் 1398 ஆம் ஆண்டு இந்தியாவில் படையெடுத்து வந்தபோது போர் வீரர்களுக்காக பிரத்யேகமாகச் சமைக்கப்பட்டது பிரியாணி. அன்றைய காலத்தில் கடல் வாணிபம் செய்தவர்கள் கோழிக்கோடு, மதராஸ், பம்பாய் துறைமுகங்களில் தங்கியபோது சமைத்து சாப்பிட்ட உணவு பிரியாணி. இதன்மூலம் அப்போதைய காலகட்டங்களில் பரவி இருக்கலாம். இதன் பின்னாளில் ஹைதராபாத், லக்னோ நிஜாம்களுக்கு பிரியமான உணவாக பிரியாணி மாறிப்போனது. இது இஸ்லாமியர்களால் தயாரிக்கப்படும் உணவாகவே இருந்தது. முதலில் லக்னோ அவாதி பிரியாணி இந்தியா முழுவதும் பிரபலம்.

இது பாரசீக முறைப்படி தயாரிக்கப்படும் ஒரே பிரியாணி. பின் டெல்லி முகல் பிரியாணி பிரபலம். 1856இல் கல்கத்தாவை ஆண்ட நவாப் அலி ஷா மூலம் கல்கத்தா பிரியாணி பிரபலம். தென்னிந்தியாவில் சைவ சமையல்காரர்கள் மூலம் திப்பு சுல்தான் கோட்டையில் வெறும் காய்கறிகள் மூலம் தாகிரி பிரியாணி சமைத்து சாப்பிட்டு இருக்கிறார்கள். அதை அந்தக் காலகட்டத்தில் பரப்பினார்கள். அதே காலகட்டத்தில் ஹைதராபாத்தை ஆண்ட நிஜாம்கள் அதே முறையில் மாமிசத்தை சேர்த்து ஹைதராபாத் பிரியாணி என்றும், ஆற்காடு நவாப்கள் மூலம் ஆற்காடு பிரியாணி என்றும், ஆம்பூர் வாணியம்பாடி பிரியாணி என அந்தப் பகுதிகளில் மிகவும் பிரபலமாக இருந்திருக்கிறது. பெரும்பாலும் இந்தியாவில் ஹைதராபாத் பிரியாணி பிரபலம். அதுவும் அதில் மீன், இறால், காடை, கோழி, முயல் உள்பட 49 வகைகளில் தயாரிக்கப்படுகிறது. அதனால் இந்த வகை பிரியாணி பிரபலம். ஆம்பூர் பிரியாணி ஆம்பூர் பகுதி, தமிழ்நாட்டின் வடபகுதிகள், ஆந்திராவின் கடலோரப் பகுதிகள் மற்றும் கர்நாடகாவில் பெங்களூரு, கிழக்குப் பகுதிகளில் பிரபலம். கேரளத்தில் நவாப்கள் ஆண்ட போது கோழிக்கோடு தலைச்சேரி பிரியாணி பிரபலம். மும்பையில் முஸ்லீம் மக்களால் தயாரிக்கப்பட்டு விற்பனை செய்யப்பட்ட பம்பாய் பிரியாணி பிரபலமானது. இது வட இந்தியாவில் பிரபலமானது.

1957 ஆம் ஆண்டு நாகசாமி நாயுடு என்பவரால் ‘ஆனந்த விலாஸ்’ என்ற பிரியாணி கடை தொடங்கப்பட்டு, அதில் அவர்கள் பிரியாணி சமைக்கும் போது தலைப்பாகை அணிந்துகொண்டு சமைக்கும் வழக்கமுடையவர் என்பதால் அந்தக்கடை காலப்போக்கில் அவர்களின் சொந்த ஊரான திண்டுக்கல்லையும் சேர்த்து ‘திண்டுக்கல் தலப்பாக்கட்டு பிரியாணி’ என்று பிராண்ட் ஆனது. இந்த வகை உலகம் முழுவதும் பிரபலமானது. மற்ற பிரியாணிகளுக்கும் தலப்பாக்கட்டு பிரியாணிக்கும் வேறுபாடு உண்டு. இது முழுக்க சீரக சம்பா அரிசி, மூலப்பொருட்கள் அனைத்தும் திண்டுக்கல் பகுதியிலிருந்து பெறப்படும் மூலப்பொருட்கள் என்பதால் இதன் சுவையே வேறு ரகமாக இருந்தது. அதுவும் திருநெல்வேலி சங்கரன்கோவில் பகுதி ஆட்டு இறைச்சி பிரபலம் என்பதால் அங்கு கன்னி வகை ஆட்டு இறைச்சி கொண்டு தயாரிக்கப்படுகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பண்டைய தமிழர்கள் ஊன் சோறு சாப்பிட்ட வரலாறு உண்டு. அரிசி, நெய், மஞ்சள், மிளகு, புன்னை, இலை அதோடு இறைச்சி சேர்த்து சமைத்து சாப்பிட்டது ஊன் சோறு. இது அந்தக் காலத்தில் மன்னர் முதல் கடைக்கோடி மனிதர்கள் வரை ஊன் சோறு சமைத்து சாப்பிட்ட வரலாறு மதுரைக்காஞ்சி குறிப்பில் உள்ளது. பிரியாணியும் ஒருவகை ஊன் சோறு போலதான். அதனால்தான் தமிழ்நாட்டில் பட்டிதொட்டியெல்லாம் பிரியாணி பரவியுள்ளது.

இது மட்டுமின்றி காஷ்மீர் பிரியாணி வகை, குஜராத் நிமோனி பிரியாணி, மூங்கில் பிரியாணி என பலவகைகள் பெருகிவிட்டது. சில பிரியாணிகளில் அந்தந்த ஊர்ச்சுவை உண்டு. தற்போது அரேபியன் மந்தி பிரியாணி ரகம் லேட்டஸ்ட் டிரண்ட்டாகிக் கொண்டிருக்கிறது. சைவத்திலும் வெஜிடபிள், பன்னீர், காளான்,காலி-ப்ளவர் என்று பிரியாணி வகைகள் உண்டு.

ஆரம்பத்தில் முஸ்லிம்களால் மட்டும் பிரியாணி தயாரிக்கப்படுவதாக இருந்தது. தற்போது பலராலும் தயாரிக்கப்பட்டு விற்கப்படுகிறது. அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு அதற்கு பிரியாணி விதிவிலக்கல்ல. பிரியாணியில் சேர்க்கும் பட்டை, ஏலக்காய், கிராம்பு, புதினா,



இஞ்சி ஆகியவை மிகச்சிறந்த பொருள்கள். அதோடு சிறந்த சைட் டிஷ் கத்திரிக்காய் பச்சடி. கத்திரிக்காய் மிகச்சிறந்த மருத்துவ குணம் உள்ள உணவு. அது பிரியாணியோடு சாப்பிட்டால் செரிமானத்திற்கு உதவும். பல கடைகளில் இவை பரிமாறப்படுவதில்லை.

வாரத்துக்கு ஒருநாளோ, இரண்டு நாட்களோ பிரியாணி சாப்பிடுவதில் தவறில்லை. ஆனால் அது ஹோட்டல் பிரியாணியாக இல்லாமல் இருப்பது பாதுகாப்பானது. ஹோட்டல் பிரியாணி என்றால் அதில் சுவையூட்டி, நிறமூட்டி, எண்ணெய் என எல்லாமே அளவுக்கு அதிகமாகச் சேர்க்கப்படும். வீட்டில் தயாரிக்கும்போது பார்த்துப் பார்த்து ஆரோக்கியமாகச் சமைப்போம். பிரியாணி சாப்பிடுவதைத் தவிர்ப்பதென்பது இயலாத காரியம். அது ஒருவித கொண்டாட்ட உணவு. எனவே, அடிக்கடி சாப்பிடுவதைத் தவிர்க்கலாம்.

எந்த அளவு பிரியாணி சாப்பிடுவது என்பது அவரவர் மனநிலையைப் பொறுத்தது. உணவைப் பொறுத்தவரை பசிக்காக சாப்பிடுகிறோமா, ருசிக்காக சாப்பிடுகிறோமா என்பது முக்கியம். பிரியாணியைப் பெரும்பாலும் யாரும் பசிக்காக சாப்பிடுவதில்லை. ருசிக்காகவே சாப்பிடுகிறார்கள்.

எப்போதுமே ஃப்ரெஷ்ஷாக சமைத்த பிரியாணிதான் ஆரோக்கியமானது. ஏற்கெனவே சமைத்து குளிர்சாதன பெட்டியில் வைத்து மறுபடி சூடுபடுத்தப்பட்ட பிரியாணி நிச்சயம் உடல் உபாதைகளை ஏற்படுத்தும்.

நள்ளிரவு பிரியாணி, அதிகாலை பிரியாணி எல்லாம் இன்றைய காலகட்டத்தில் டிரெண்டாகி வருகின்றன. அந்த நேரத்தில் நம் செரிமான மண்டலமானது தயாராக இருக்காது. இரவு முதல் அடுத்த நாள் காலை வரை நம் செரிமான மண்டலத்துக்கு ஓய்வு வேண்டும். அதனால்தான் இரவு உணவையே தூக்கத்துக்கு இரண்டு, மூன்று மணி நேரம் முன்னதாக உட்கொள்ள வேண்டும்.

பிரியாணி சாப்பிடுவதால் இறப்பு நிகழ வாய்ப்பில்லை. அசைவ பிரியாணியாக இருந்து, அந்த எலும்பு தொண்டையில் சிக்கினால், அதன் காரணமாக இறப்பு நிகழலாம். அந்த அசைவத்தில் நச்சுத்தன்மை இருந்தாலும் அப்படி நிகழலாம். மற்றபடி பிரியாணிக்கும், இறப்புக்கும் தொடர்பில்லை.

ஆனால் சாப்பிட்டு முடித்து ஐஸ்கிரீம், கூல்டிரிங்க்ஸ் குடிப்பதை தவிர்க்கலாம். சூடான இஞ்சி டீ பால் சேர்க்காமல் எடுத்துக்கொள்வது செரிமானம் உண்டாக்கும்.

பிரியாணி உண்ட பிறகு சூடான நீர் குடிக்கலாம். அல்லது செரிமானத்திற்கு மிளகு கலந்த ரசம் சோறு உணவை உட்கொள்ளலாம். பிரட் அல்வாவை தவிர்க்கலாம். எலுமிச்சைச்சாறு அல்லது பழச்சாறு குடிக்கலாம். இது அசைவத்தில் உள்ள இரும்புச் சத்துக்களை கிரகிக்க வைக்கும். பண்டிகை கால உணவாக கருதப்பட்ட பிரியாணி இன்று அன்றாட உணவுகளில் ஒன்றாகி விட்டது. புதுப்புது பெயர்களில், புதுப்புது ரகங்களில் பிரியாணி தயாராகி பிரபலமாகிக் கொண்டு வருகிறது. அனைத்தையும் ரசிப்போம், அளவோடு உண்போம்.

srinikarthi10693@gmail.com ■

# புதுவரவு




அறிவீட்டலும் அறிவூட்டலும்
சனாதனத்தால் சிதைந்த
அறிவுப் பண்பு
லெ.ஜவகர் நேசன்
Third Eye Press




காவேரி
நாவல்
சுந்தரபாண்டியன்
காவ்யா பதிப்பகம்
விலை: ரூ. 400




ஆண்டன் செக்காவ்
தமிழில் சு.ஆ.வெங்கட சுப்ராய நாயக்கர்
தடாகம் வெளியீடு
பக்கங்கள்: 104 விலை: ரூ. 120




கலைஞர் எனும் தமிழ் வரலாறு
பேரா. முனைவர் சி.சித்ரா
பேரா. முனைவர் சா.உதயசூரியன்
அகரம் பதிப்பகம்
விலை: ரூ. 300




பாரதியம்
பேரா. முனைவர் சி.சித்ரா
கவிதா பதிப்பகம்
விலை: ரூ. 100



கவிதை

**ரகுநாத் வ**

# கற்பனைக்கு மீறி

தேங்கிய மழையினை
மிதித்தோடும் பாதங்களால்
நிறைகின்ற பாளங்கள்

மீந்தப் பூக்களை
தேங்கப் பிடித்திருக்கும்
கூடையில் வழிகின்ற மணம்

கல் தோசையின் ஆவி
நுகர்கையில் கீழிறங்குகிறது
யாசகரின் ஏந்தல்

சாரலேந்தக் காத்திருக்கும்
புங்கைக்கு கீழே
வானம் காட்டும் காளான்

வயிறுப்பிய சாயலிலிருக்கும்
கருப்பு நெகிழிப்பையில்
கங்குல் பிடித்துக் கடக்கின்றன
காட்சிகள்

கற்பனைக்கு மீறி
அடுத்த இரயில் மூன்று
நிமிடங்களில் என்கிறது
ஆழ்துளைச் சுரங்கம்.

raghunath3784@gmail.com ■





இந்திரா பார்த்தசாரதி

# ‘சிலப்பதிகார’ச் சிக்கல்கள்

தொடக்கத்திலேயே சொல்ல விரும்புகிறேன். இது ஆராய்ச்சிக் கட்டுரையன்று. உரத்த சிந்தனை. சிலப்பதிகாரக் காவியம் பற்றி என் மனத்தில் தோன்றிய எண்ணங்கள் ஐயங்கள் ஆகியவற்றை முதலில் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன், இவ்வாறு பகிர்தலிலும் உரக்கச் சிந்திப்பதிலும் எனக்குத் தெளிவு ஏற்பட்டால், சிலப்பதிகாரம் பற்றி ஒரு புதிய நூல் நான் எழுதக்கூடும் என்பது என் நம்பிக்கை. அதற்குள் எதுவும் குறுக்கிடக் கூடாது.

பள்ளிப் பருவத்திலிருந்தே என்னை மிகவும் ஈர்த்த நூல் ‘சிலப்பதிகாரம்’. பத்தாம் வகுப்பில் எனக்கு ‘ஊர்சூழ்வரி’ பாடமாக இருந்தது. அந்தப் பகுதி என்னை மிகவும் பாதித்தது. என்ன காரணம் என்று அப்பொழுது எனக்குத் தெரியவில்லை. ‘என்றனன் வெய்யோனி’ லிருந்து இறுதி வரியாகிய ‘சென்றாள் அரசன் செழுங்கோயில் வாயின் முன்’ என்பது வரை எனக்கு மனப்பாடம். பொருள் முழுவதும் விளங்காவிட்டாலும், தவறிழைக்கைப்பட்ட ஒரு பெண்ணின் சீற்றம் என் மனத்தில் பல சலனங்களை ஏற்படுத்தியது.

எனக்கு முதுகலை வகுப்பில் ‘சிலப்பதிகாரம்’ முழுவதும் பாடமாக இருந்தது, அப்பொழுது என்னைக் கவர்ந்தவை, ‘கானல் வரி’, ‘வேனிற்காதை’, ‘ கொலைக்களக் காதை’, ‘ஊர்சூழ்வரி’, ‘வழக்குரைக் காதை’ ஆகியவை.

‘வஞ்சிக் காண்டம்’ பிற்சேர்க்கையாக இருக்கலாமோ என்று எனக்கு அப்பொழுது தோன்றிற்று. நம் இலக்கியப் பண்பாட்டு மரபில், கதை துன்பவியல் நிகழ்வாக முடியக்கூடாது என்பதற்காக வேறு யாரோ அக்காண்டத்தை இடைச்செருகலாக நுழைத்திருக்கலாம் என்று எனக்குப் பட்டது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு மறுபடியும் ‘சிலப்பதிகாரம்’ முழுவதையும் படிக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அப்பொழுது ‘சீதையின் காட்டுச் செலவும் கண்ணகியின் மதுரைச் செலவும்’ என்ற தலைப்பில் ஒரு கருத்தரங்குக்காகக் கட்டுரை எழுதிக்கொண்டிருந்தேன்.

அந்நிலையில் எனக்கு வணிகத் தொழிலுக்கு அந்நியப்பட்டுப் போன கோவலன் என்ற கலைஞன் மீது அனுதாபமும், கோவலனைக் கணவன் என்ற ஸ்தாபனமாகக்

கருதிய கண்ணகி மீது கோபமும் உண்டாயின... அப்பொழுதுதான் பல விவாதங்களுக்குக் காரணமாகிய என் கட்டுரை, 'கண்ணகி எனும் கற்பு இயந்திரம்' என்று 'கணையாழி' யில் வெளி வந்தது.

ஆகவே 'சிலப்பதிகாரம்' என்னுடைய ஒவ்வொரு பருவத்திலும் என்னை என் சிந்தனைப் பரிணாமத்துக்கேற்ப வெவ்வேறு வகையில் பாதித்துக்கொண்டே வந்திருக்கிறது என்பதை என்னால் இப்பொழுது புரிந்துகொள்ள முடிகின்றது.

இதற்கு அடிப்படையான காரணம், 'சிலப்பதிகாரம்' மற்றைய தமிழ்ச் செவ்வியல் நூல்களாகிய 'கம்பராமாயணம்', 'திருக்குறள்' போலல்லாமல், முற்றிலும் மாறுபட்ட வித்தியாசமான படைப்பிலக்கியம் என்பதுதான்.

முதல் வேறுபாடு, இது சமஸ்கிருதத்திலிருந்து இறக்குமதியான காவியக் கதையன்று. சேர, சோழ, பாண்டிய நாடுகளை உள்ளடக்கிய தமிழ்நாட்டு நிகழ்வுகளைக் கருவாகக் கொண்ட முதல் படைப்பிலக்கிய நூல்.

படைப்பிலக்கியத்தில் வெவ்வேறு வகைகள் உண்டு. குறிப்பாக, மடை திறந்தாற் போல, தன்னிச்சையாகப் பொங்கும் (eloquent and spontaneous) படைப்பு ஒருவகை. இலக்கியக் கொள்கைத் தீர்மானங்களுடன் சொல்லவந்த கதையை எந்தெந்தக் களத்தில் அது நிகழ்கிறதோ, அக்களத்தின் பூகோளப் பின்னணியிலும், அக்களத்துகுரிய பாரம்பரியக் கலை வடிவங்களைப் புலப்படுத்தும் கையேட்டு ஆவணமாகமாக ஆக்கிக் கூறும் படைப்பு இன்னொரு வகை. கம்ப ராமாயணம் முதல் வகை. சிலப்பதிகாரம் இரண்டாவது வகை.

சிலப்பதிகாரம் கம்ப ராமாயணத்தைப் போலவோ, திருக்குறளைப் போலவோ சாதாரண மக்களிடையே பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் பிரபலமாக இருந்திருக்கவில்லை... 'ஐம்பெரும் காப்பியங்கள்' என்பதே மிகப்பிற்கால வழக்கு. ஆனால், அறிஞர்களிடையே இந்நூல் வழக்காற்றில் இருந்திருக்கக் கூடுமென்பது பத்தாம் நூற்றாண்டுக் 'களவியல்' உரையாலும், 11ம் நூற்றாண்டு 'யாப்பருங்கல விருத்தி உரை'யாலும் தெரிகிறது.

சமஸ்கிருதக் காவிய மரபுக்கு முற்றிலும் வேறுபட்ட பாத்திரப் படைப்புக்களை உடைய நாடகக் காப்பியம் என்பதாலும், ஓரளவுச் சமணச் சார்புடையது என்பதாலும் இந்நூல் மக்களிடையே அவ்வளவாகப் பரவவில்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

தொல்காப்பியம், செய்யுளியல் 237ம் சூத்திரத்துக்கான ('தொன்மைதானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே') உரையில், நச்சினார்க்கினியர், 'தொன்மை' என்பதற்கு சான்றாக பெருந்தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை, சிலப்பதிகாரம் ஆகிய மூன்று நூல்களையும் குறிப்பிடுகிறார். 'தொன்மை' என்பது பழைய கதைச்செய்திகளின் அடிப்படையில் ஆக்கப்படும் உரையோடு விரவிய புதுப்படைப்பு. அப்படியானால் அச்செய்திகள் எப்பொழுது வழங்கின, அச்செய்திகள் யாவை என்ற கேள்வி எழுவது இயற்கை... சங்க நூலாகக் கருதப்பட்டு பல புலவர்கள் இயற்றியதாகக் கூறப்படும், 'தகடூர் யாத்திரை'யின் ஆசிரியர் பெயரை நச்சினார்க்கினியர் சொல்லவில்லை என்பதைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

'பாரத வெண்பா' ஆசிரியர் பெயரைப் 'பெருந்தேவனார்' என்று கூறும் உரையாசிரியர், 'சிலப்பதிகார' ஆசிரியர் பெயரை ஏன் குறிப்பிடவில்லை?

'கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார்' ஆகிய சங்க காலப் புலவர்கள், கடையெழுவள்ளலாகிய 'பேகன்' என்ற குறுநில மன்னன், தன்

மனைவியை விட்டுப் பிரிந்து வாழ்வதைக் குறிப்பிட்டு, அவன் மனைவியின் துயரத்தைப் புலப்படுத்துகிறார்கள். அவள் பெயர் கண்ணகி.

மருதன் இளநாகனார் என்ற புலவர் ஒரு பெண் பரணருகே வேங்கை மரத்தடியில் சோகத்துடன் நிற்பதை 'நற்றிணை' செய்யுள் ஒன்றில் கூறுகிறார். 'ஒரு முலை அறுத்த திருமாவுண்ணி' என்று அவளைச் சித்திரிக்கின்றார். 'ஏதிலாளன்' செய்த செய்கைக்காக வருந்தி ஒரு முலை குறைத்தவள் என்று குறிப்பிடப்படும் அவள் யாராக இருக்கலாம்? 'ஏதிலாளன்' என்றால் 'அந்நியன்'. தனக்கு 'அந்நியன்' போல் ஆகிவிட்ட கணவன் என்ற பொருளில் இது வருகின்றதா, அல்லது 'ஏதிலாளன்' என்பது கோவலனைத் தவறாகக் கொலை செய்வித்த 'பாண்டியனை'க் குறிப்பிடுகின்றதா? என்ற பல கேள்விகள் எழுகின்றன.

சிலப்பதிகாரம் இச்செய்திகளின் அடிப்படையில் உருவாகியிருக்கக் கூடிய காவியம் என்பதால்தான் நச்சினார்க்கினியர் இதைத் 'தொன்மை'க்கு சான்றாகக் காட்டுகிறாரா?

இன்னொரு செய்தி. 'யாப்பருங்கலக் காரிகை விருத்தி உரை'யில் ஒருத்தி, கணவன் கொலையுண்டதைக் கண்டு பாடியதாக ஒரு வெண்பா வருகிறது. இது 'பத்தினிச் செய்யுள்' என்கிறார் உரையாசிரியர். இதற்கும் 'சிலப்பதிகார'த்துக்கும் தொடர்பு உண்டா என்பதும் சிந்திக்கப்பட வேண்டியதொன்றாகும்.

'முலை' என்பது ஒரு குறியீட்டு உணர்வாகத் தமிழ் இலக்கியங்களில் பயின்று வருகிறது. முலையைப் பறித்து எறிவது என்பது தன் பெண்மையை அழித்துக்கொள்வதற்கான குறியீடாகும். 'நாச்சியார் திருமொழி'யில் ஆண்டாள் கூறுகிறார்:

'கொள்ளும் பயன் ஒன்று இல்லாத
கொங்கை தன்னை கிழங்கோடு
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்வில்
எறிந்து என் அழலைத் தீர்வேனே.'

சிலப்பதிகாரத்தில் கண்ணகி 'இடமுலை கையால் திருகி மதுரை வலமுறை மும்முறை வாரா அலமந்து மட்டடார் மறுகின் மணி மணிமுலையை வட்டித்து விட்டாள் எறிந்தாள்' என்று வருகிறது. ஆண்டாள் 'அழல்' என்று குறிப்பிடுவதை வைத்துக்கொண்டு, கண்ணகி இட முலையை எறிந்து மதுரையை எரித்தாள் என்பதை ஒரு குறியீடாகக் கொள்ள முடியுமா?

ஏன் இடமுலையைத் திருகி எறிகிறாள்? அர்த்த நாரீஸ்வரர் கோட்பாட்டில் இடப்பக்கம் பெண். இடப்பக்கம் போகம். வலப்பக்கம் யோகம் என்பது ஐதீகம். அந்தப் பெண்மையை அழித்துக்கொள்வதின் குறியீடாகத்தான் இது வருகிறதா? 'கடவுள் பத்தினி'யாக ஆகி விடுகின்ற கண்ணகி பின்னால் கொற்றவையின்/மங்கலாதேவியின் அம்சமாக வழிபாட்டுக்குரியவளாக மாறுகிறாள் என்பதில் வியப்பதற்கு ஏதுமில்லை. இதற்கான முன் அறிவிப்பாக 'வேட்டுவ வரியில்', தெய்வமேறிய பெண் கண்ணகியைப் பார்த்ததும் கூறுவனவற்றை நினைவில் கொள்ள வேண்டும்.

'இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து
ஒருமா மணியா யுலகில் ஓங்கிய
திருமா மணி'

சீற்றமடைந்த பெண்ணைத் தெய்வமாக்கி விடுவது, அவளை அடக்கி வைத்திருப்பதற்கான வழியா என்பதைப் பற்றியும் சிந்திக்க வேண்டும். சங்காலத்தில் பத்தினி வழிபாடு என்றும் எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை.

'கற்பு' என்பது திருமண நிலையோடு

இணைத்துப் பேசப்படுகிறது. 'களவியல்'- திருமணத்துக்கு முந்திய நிலை, 'கற்பியல்' திருமணத்துக்குப் பிந்திய நிலை என்றுதான் பொருள் கொள்ள முடிகின்றது. 'பத்தினி வழிபாடு' சிலப்பதிகாரக் கதையுடன்தான் தொடங்கியதா?

சிலப்பதிகாரம் எப்பொழுது எழுதப்பட்டிருக்க வேண்டும்? சிலப்பதிகார ஆசிரியராகக் கூறப்படும் இளங்கோவடிகள், சேரன் செங்குட்டுவன் தம்பியா? அவர் 'மணிமேகலை' ஆசிரியராகக் கூறப்படும் தண்டமிழ்ச் சாத்தனாருக்கு நெருங்கிய நண்பரா? இரண்டு காவியங்களும் ஒரே காலத்தனவா? இக்கேள்விகளுக்கு இதுவரை யாரும் சரியான விடைகள் அளித்திருப்பதாகத் தெரியவில்லை. சாத்தியமும் இல்லை. ஒரு விடை புதுக்கேள்வியை எழுப்புகிறது. இலக்கியத்தின் சுவாரஸ்யமே கேள்விகளும், விடைகளும், புதுக் கேள்விகளும்தாம்.

சிலப்பதிகாரத்தின் காலம் பொ.ச (பொது சகாப்தம்) இரண்டாம் நூற்றாண்டு என்று பரவலாக நம்பப்பட்டு வருகிறது. காரணம், சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எழுப்பியபோது அவ்விழாவில் இலங்கை அரசன் கயவாகு கலந்துகொண்டான் என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படுகிறது என்பதுதான். இவன் இரண்டாம் கயவாகு என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இரண்டாம் கயவாகு காலம் இலங்கை வரலாற்று ஆவணம், மஹாவம்ஸத்தின்படி பொ.ச. இரண்டாம் நூற்றாண்டு. ஆகவே சேரன் செங்குட்டுவன் காலம் பொ.ச. இரண்டாம் நூற்றாண்டு. சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ அவனுடைய தம்பி என்பதால் சிலப்பதிகாரம் பொ.ச. இரண்டாம் நூற்றாண்டில்தான் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று இதுவரைப் பெரும்பான்மையான தமிழ்ப் பேராசிரியர்கள் கூறி வருகிறார்கள்.

சங்க நூலாகிய 'பதிற்றுப்பத்தி'ல், ஐந்தாம் பத்து பரணர் நெடுஞ்சேரலாதான் மகன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாடிய பாடல்கள். இவன்தான் சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்கு கோயிலெடுத்த சேரன் செங்குட்டுவன். 'கடவுள் பத்தினிக் கற்கோள் வேண்டி கான் நவில் கானம் கரையில் போகி ஆரிய அண்ணலை வீட்டி' என்று பரணர் பதிகத்தில் கூறுகிறார். கடவுள் பத்தினி என்பவள் கண்ணகி. அவளுக்குக் கோயில் கட்ட கல்லெடுக்க வேண்டிப் படையெடுத்த போது எதிர்த்த ஆரிய மன்னர்களின் தலைவனை முறியடிக்கிறான் செங்குட்டுவன் என்று கூறுகிறார் பரணர்.

செங்குட்டுவனைப் பாடிய கவிஞர், கடவுள் பத்தினியைப் பற்றி ஒரு மாபெரும் காவியமே படைத்திருக்கும் அவன் தம்பியைப் பற்றிக் குறிப்பிடவேயில்லை. ஏன்? செங்குட்டுவனுக்கு சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள் தம்பி அல்லர் என்ற ஒரே காரணந்தான். சேரன் செங்குட்டுவன் காலம் பொ.ச. இரண்டாம் நூற்றாண்டு என்று வைத்துக்கொண்டாலும் சிலப்பதிகாரம் எழுதிய ஆசிரியர் அவனுக்குப் பல நூற்றாண்டுகள் பிற்பட்டவர்தாம் என்று தெரிகிறது.

அவ்வாறென்றால், சிலப்பதிகாரப் 'பதிகத்தில்' 'குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த குடக்கோச் சேரல் இளங்கோ அடிகள்' என்றுதானே அவர் குறிப்பிடப்படுகின்றார் என்ற கேள்வி எழுகின்றது. குன்றக்குறவர்கள், அவரிடம், ஒரு முலை இழந்த பெண் கொழுநனுடன் விமானமேறி விண்ணுலகம் சென்றதைத் தாங்கள் பார்த்ததாகக் கூறியதும், அப்பொழுது சாத்தனார், இளங்கோ அடிகட்கு கண்ணகி-கோவலன் கதையைக் கூற, தாம் அதைத் தொடர்நிலைக் காப்பியமாக எழுதுவேன் என்று இளங்கோ கூறுகிறார் என்பதினால் அவர் அக்கதை நிகழ்ந்த காலத்தவர் என்று ஏன்

கூறவியலாது என்பது கேள்வி. அண்ணன் செங்குட்டுவன் பட்டமேற வேண்டும் என்ற காரணத்துக்காகத்தானே. அவன் சமண மாதம் சார்ந்து துறவுக்கோலம் பூண்டார் என்று 'வரம் தரும் காதை' யில் வரவில்லையா என்ற கேள்விக்கும் விடை கூறியாக வேண்டும்.

'பதிகம்' 'சிலப்பதிகாரம்' எழுதிய ஆசிரியரால் எழுதப்படவில்லை. பிற்சேர்க்கை. இளங்கோவடிகளைப் பற்றிய புனைக்கதைகள் உருவான பிறகு எழுதப்பட்டிருக்க வேண்டும். 'பதிகத்தில் வரும் அதே செய்தி, அதாவது மலை நாட்டு மக்கள் இளங்கோவுக்குத் தெரிவித்த செய்தி, சிலப்பதிகாரத்தின் உட்பகுதியாகியாகிய 'வஞ்சிக் காண்ட'க் 'காட்சிக் காதை'யில் வேறுவிதமாகக் கூறப்படுகிறது. அவர்கள் சேரன் செங்குட்டுவனுக்கு இச்செய்தியைக் கூறுகிறார்கள். அப்பொழுது சாத்தனார் அவனுக்கு கண்ணகி-கோவலன் கதையைக் கூறுகிறார். அந்த இடத்தில் இளங்கோ இருந்ததாகச் சொல்லப்படவேயில்லை.

'பதிக'த்தில், தண்டமிழ்ச் சாத்தன் கண்ணகி-கோவலன் கதையைக் கூறியதும், இளங்கோ மூன்று உண்மைகளை வற்புறுத்துவதற்காக, 'சிலப்பதிகாரம் என்னும் பெயரால்' 'நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்' என்று அறிவித்துவிட்டு, அவர் எழுதப்போகும் முப்பது அதிகாரங்களின் பெயர்களையும் சொல்லிவிடுகிறார். அவர் அவ்வாறு சொல்லும்போது செங்குட்டுவன் வடநாட்டுப் போர்ச்செலவை மேற்கொள்ளவேயில்லை. கண்ணகிக்குக் கோயில் கட்டப்போவதாகவும், அதற்கு இமய மலையிலிருந்து கல்லேடுத்து வந்து, தான் தோற்கடிக்கப் போகும் ஆரிய வேந்தர்களின் தலைமேல்அக்கல்லை ஏற்றிவரப் போவதாகவும் வஞ்சினம் கூறுகிறான். சாத்தனார் இளங்கோவுக்கு இக்கதையைக் கூறும்போது, இவற்றில் எதுவுமே நடைபெறவில்லை. ஆனால் இளங்கோ பின்னால் நிகழவிருக்கும் செய்திகள் அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு காவியம் செய்யப்போவதாகக் கூறி அதிகாரத் தலைப்பையும் அறிவிப்பதுதான் வேடிக்கை.

மதுராபதி தெய்வம் கண்ணகியிடம் வந்து கோவலனின் பூர்வஜென்மக் கதையைச் சொல்லுகிறது. இது 'அழற்படு'க் காதையில் 'அந்தி விழவு நேரத்தில்' நிகழ்வதாகச் சொல்லப் படுகிறது. ஆனால், 'பதிக'த்தில் மதுராபதி தெய்வம் கண்ணகியிடம் சொன்னதை நள்ளிரவில் தாம் கேட்டதாகச் சாத்தனார் கூறுகிறார்.

ஆகவே 'பதிகம்' பிற்சேர்க்கை என்பது தெளிவாகிறது. 'வரந்தரு காதை'யில் அதாவது இறுதிக் காதையில், தெய்வமாகிவிட்ட கண்ணகி, அவளுடைய தோழியாகவிருந்த தேவந்தி மீது வந்து, அவள் கோட்டத்துக்குச் சென்ற இளங்கோவுக்கு அவர் தம் அண்ணனுக்காகச் செய்த தியாகத்தைப் பற்றி அவருக்கே கூறுவதாக வருகிறது... அந்தக் காதையில் தேவந்தி இருமுறை உடனுக்குடன் சிறிது இடைவெளிக்குப் பிறகு தெய்வம் ஏறிப்பேசுவதாக வலிந்து சொல்லப்படுவதைப் பார்க்கும்போது, 'வரந்தரு காதை'யும் பின்னால் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று கருதத் தோன்றுகிறது. இந்த ஓரிடத்தில்தான் இளங்கோ தன்மை ஒருமையில் 'யானும் சென்றேன்' என்று சொல்வதாக வருகிறது.

'வாழ்த்துக் காதை'யுடன் கதை முடிந்து விடுகிறது.

தொடர்ச்சி அடுத்த இதழில்

